# வைதிக தர்ம வர்த்தனீ

மலர் 12.
இதழ் 1.

விளம்பி ௵
ஐப்பசி ௴



ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா

## விளம்பி௵ ஐப்பசி௴ சரத்ருது. தக்ஷிணாயனம்.

| தேதி | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ப்ராத திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | அக்டோபர் 17 | வெ. | பஞ். | 10-53 | கே. | 10-38 | ம. அ. | ஷஷ். |
| 2 | 18 | சனி | ஷஷ். | 6-40 | மூல. | 8-13 | சி. | ஸப். |
| 3 | 19 | ஞா. | ஸப். | 4-20 | பூரா. | 7-40 | சி. அ. | அஷ். |
| 4 | 20 | திங. | அஷ். | 3-52 | உத்தி. | 8-55 | ம. அ. | நவ. |
| 5 | 21 | செவ். | நவ. | 5-15 | ஸ்ர. | 11-55 | சி. | தச. |
| 6 | 22 | புத | தச. | 8-15 | அவி. | 16-30 | சி. | ஏகா. |
| 7 | 23 | வியா. | ஏகா. | 12-43 | சத. | 22-25 | ம. சி. | த்வா. |
| 8 | 24 | வெள். | த்வா. | 18-13 | பூரட். | 29-17 | சி. | — |
| 9 | 25 | சனி. | த்ர. | 24-27 | உத்தி. | 36-47 | சி. | த்ர. |
| 10 | 26 | ஞா. ○ | சதுர். | 31-05 | ரேவ. | 44-35 | அ. சி. | சது. |
| 11 | 27 | திங். | பௌர. | 37-43 | அச. | 52-20 | சி. | பௌர |
| 12 | 28 | செ. | ப்ர. | 44-10 | பர. | 59-53 | சி. | ப்ர. |
| 13 | 29 | புதன். | த்வி. | 50-10 | க்ருத் | 60-00 | அ. | த்வி. |
| 14 | 30 | வியா. | த்ரி. | 55-27 | ,, | 6-55 | ம. | த்ரி. |
| 15 | 31 | வெள். | சது. | 59-43 | ரோ. | 13-10 | ம. சி. | சது. |
| 16 | நவம்பர் 1958 1 | சனி. | பஞ். | 60-00 | மிருக. | 18-30 | சி. | பஞ். |
| 17 | 2 | ஞா. | ,, | 2-52 | திரு. | 22-35 | சி. | ஷஷ். |
| 18 | 3 | திங். | ஷஷ். | 4-37 | புன. | 25-17 | அ. சி. | ஸப். |
| 19 | 4 | செவ். | ஸப். | 4-45 | பூச. | 26-25 | சி. | அஷ். |
| 20 | 5 | புத. | அஷ். | 3-15 | ஆயி. | 25-52 | சி. | நவ. |
| 21 | 6 | வியா. | நவ. | 0- 2 | மக. | 23-42 | அ. சி. | தச. |
| | | | தச. | 55-12 | | | | |
| 22 | 7 | வெள். | ஏகா. | 48-53 | பூர. | 19-58 | சி. | ஏகா. |
| 23 | 8 | சனி | த்வா. | 41-23 | உத். | 14-52 | ம. | த்வா. |
| 24 | 9 | ஞா. | த்ர. | 32-55 | ஹஸ். | 8-42 | சி. | த்ர. |
| 25 | 10 | திங். | சது. | 23-53 | சித். | 1-48 | அ. | சது. |
| | | | | | ஸ்வா. | 54-33 | ம. | |
| 26 | 11 | செவ் ● | அமா. | 14-45 | விசா. | 47-25 | ம. சி. | அ. ப். |
| 27 | 12 | புதன் | ப்ர. | 5-48 | அனு. | 40-45 | சி. | த்வி. |
| | | | த்வி. | 57-35 | | | | |
| 28 | 13 | வியா. | த்ரி. | 50-28 | கேட். | 35-05 | சி. | த்ரி. |
| 29 | 14 | வெள். | சது. | 44-50 | மூலம் | 30-50 | அ. | சது. |
| 30 | 15 | சனி | பஞ். | 41-03 | பூரா. | 28-15 | சி. | பஞ். |

4உ சரஸ்வதி பூஜை, 5உ விஜயதசமி, 6, 22உ ஏகாதசி, 24உ ப்ரதோஷம், 13உ கிருத்திகை, 25உ தீபாவளிப்பண்டிகை

**விநாயகர் பிரும்மசாரியா? கிருஹஸ்தரா?**

श्रीः

॥ श्रीमुखं ॥




श्रीमत्परमहंस परिव्राजका चार्यवर्य
श्रीमच्छंकर भगवत्पाद प्रतिष्ठित
श्रीकाञ्ची कामकोटिपीठाधिप जगद् गुरु
श्रीमच्चन्द्र शेखरेन्द्र सरस्वती श्रीपादैः ॥

श्रीवत्स. श्री सोमदेवशर्मविषये क्रियते नारायणस्मृतिः ।

வேதம், இதிஹாஸ புராணங்கள், தர்ம சாஸ்திரங்களில் அடங்கியுள்ள தர்மங்களைத் தங்களுடைய வைதிக தர்மவர்த்தனி பத்ரிகை மூலம் ப்ரசாரம் செய்துகொண்டு வருவதைக்கண்டு ஸந்தோஷிக்கிறோம்.

இப்படியே தர்ம ப்ரசாரம் செய்துகொண்டு தங்கள் பத்ரிகை ஸ்ரீ மஹா த்ரிபுரஸுந்தரீ ஸமேத ஸ்ரீ சந்த்ர மௌளீச்வரர் க்ருபையினால் மேன்மேலும் வ்ருத்தியடையுமாறு ஆசீர்வதிக்கிறோம்.

விஜய யாத்ராஸ்தானம்
மைலாப்பூர்-சென்னை
விளம்பி நிஜச்ராவண
பஹுள ஷஷ்டி.

நாராயணஸ்ம்ருதி:

சில அவதாரம் பிரும்மசாரி. சிலது கிருஹஸ்தர்.

# வைதிக தர்ம வர்த்தனீயின் 12-ம் ஆண்டு.

சென்ற பதினொரு ஆண்டுகளாக காலந்தவறாமல், நமக்கு ஒருவித சிரமமும் கொடுக்காமல் மிக நன்றாய் நடத்தி ஓய்வுபெறும் சிரஞ்சீவி க்ஷேமம் சுப்ரமண்யனுக்கு எவ்வளவு நன்றியும் தன்யவாதமும் கூறினாலும் போதாது. அந்த நஷ்டத்திற்கு ஈடில்லை.

கடவுள் அநாதி. வேதம் அநாதி. தர்மம் அநாதி. உலகம் அநாதி. காலம் அநாதி. காலசக்ரம் தானும்சுற்றி உலகையும் சுற்றவைக்கிறது. பழையன கழியும். புதியன புகும். ஒவ்வொரு பன்னிரண்டாண்டுகளிலும் எல்லாம் மாறும். நம் பத்ரிகையும் மாறுகிறது. ஆனால் விஷய மாறுதலில்லை.

கால சக்ரம் சுற்றும் வேகத்தில் முதலுக்கே மோசம் வந்திடுமோ என அஞ்சினோம். ஸ்ரீமத் ஆசார்யாளின் ஆசியும், அன்பர்களின் ஆதரவும், அந்த அச்சத்தைச் சிறிது அகற்றிற்று. ஆயினும் அடியோடு அகன்றதெனக்கூறுவதற்கில்லை. இச்சமயம் ஒரு பத்ரிகை நடத்துவது அதை நிர்வகிப்பது ஸுலபமான கார்யமில்லை. பல்வகை சிரமம் உண்டு.

ஏனைய பத்ரிகை போலல்லாமல் இது தனியான முறையில் நடக்கும் தர்ம ஸ்தாபகம், தேவாலயம் போன்றது. ஒருவர் இருவர் முன்னின்று நிர்வாஹம் செய்தாலும் தார்மிகரது பத்ரிகை இது. அவரவரும் நமதுபத்ரிகை என்று அபிமானத்துடன் குற்றங்களைந்து குணமேற்று வளர்க்கவேண்டும்.

பெண்களுக்கென தனிப்பட்ட விஷயம் அதிகம் இல்லை எனினும் பெண் மக்கள் ஆதரவு அதிகமென அறிகிறோம். பத்ரிகை அதிகம் விற்பனை ஆகவேண்டுமென்பதே நமது நோக்கமல்ல. பலர் படிக்கவேண்டும். தர்மத்தை அறிய வேண்டும்; அதை அநுஷ்டிக்க வேண்டும்.

---

அவர் உள்ள உலகம் யாது? ஆநந்தபுவநம்.

ஆஸ்திகத்தை வளர்க்க வேண்டும், எல்லோரும் இன்புற வேண்டுமென்பதே நமது முக்ய நோக்கம்.

பெரும்பாலான பெண்மக்கள் ஆஸ்திகர்களே. அவர்கள் தர்மத்தை நன்குணர்ந்தால் தன் குடும்பத்தை தர்ம மயமாக்குவர். ஸகிகளையும் இதைப் படிக்கச் செய்து அவர் குடும்பத்தையும் தர்ம குடும்ப மாக்கலாம். பாரதத்தின் அம்மைமான பெண்மக்கள் ஒவ்வொருவரும் இந்த தர்மத்தில் பங்கெடுத்துக் கொள்ளும்படி வேண்டுகிறோம். ஒருவர் மற்றொருவரைச் சேர்த்தால் போதும். பத்ரிகை நிற்காமல் ஓங்கி வளரும்.

இதில் வெளிவரும் விஷயங்களைவிடச் சிறந்ததும் வைதிகமுறை தவறாததும் ருசிகரமானதும் உள்ள விஷயங்களை பெண் மக்களோ ஆண்களோ எழுதினால் கூடியவரை அவைகளையும் வெளியிட முயற்சிக்கிறோம். வேதம், வேதாந்தம், உபநிஷத், ஆகமம், புராணம், இதிஹாஸம், வேதாங்கம் என்ற தலைப்பின் கீழ் இருக்கவேண்டும். விவேக சூடாமணி முடிந்தவுடன், அபூர்வமான சில கீதைகள் வெளிவரும். கர்மா க்ஞானம் பக்தி தர்மம் இவைகளை முன்னோர் நூலைத் தழுவியே வெளிவரும்.

தார்மிக விஷயங்களை வெளியிட வேண்டுமென பலர் விருப்பம். தார்மிக நூல்களை- மதிப்புரை-அறிமுகம் செய்ய வேண்டுமென புத்தகமெழுதுவோர் அவா. இவைகளைப் பூர்ணமாகப் பூர்த்தி செய்யமுடியாவிடினும் ஒரு பக்கமாவது இதற்கென ஒதுக்க உத்தேசம். மாதாமாதம் வரும் விரத பண்டிகைகளைப் பற்றி எழுத புது சந்தாதாரர் விருப்பம். ஏற்கெனவே வந்த விஷயம் வேண்டாமென பழைய சந்தாதாரர். இருவருக்கும் பொதுவாக சுருக்கமாக எழுத உத்தேசம்.

ஆரம்பமாதமானதால் விஷயங்களுக்குப் பக்கம் குறைந்தது. அடுத்தமாதத்தில் வழக்கப்படி பக்கமதிக்கபடும். சென்ற ஆண்டுகளைப்போல் ஆதரியுங்கள். உடனே தாமதமின்றி தங்கள் சந்தாவை அனுப்புங்கள். விலாஸத்தை நன்கு புரியும்படி தெளிவாக கேப்டல் லெட்டரில்

---

**மனைவி உண்டா? வித்தி புத்தி என இருவர் உண்டு.**

எழுதுங்கள். 20உக்குள் பத்திரிகை வராவிடில் உடனே எழுதுங்கள். விலாஸம் மாறினால் தவறாமல் தெரிவியுங்கள்.

கருணை ததும்பும் கடாக்ஷத்துடன் "இதை நிறுத்தாதே நடத்து" எனக்கூறி ஸ்ரீமுக மூலமாக பேரருள் புரிந்த ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் திவ்ய ஸ்ரீபாத கமலங்களுக்கு பக்திபுரஸ்ஸரமான வந்தனம். அடியில் வெளிவரும் "தர்ம துணுக்குகளைக் கடாக்ஷித்து ரஸித்து அருள் புரியும் ஸ்ரீ புதுப்பெரியவர்களின் திருவடிகமலங்களுக்கு வந்தநம். "நம் ஆதரவு உண்டு நடத்து" என அன்புவாக்கும் முன் சந்தாவும் அளித்த நேயர்களுக்கு வணக்கம். நன்றி. நான் விலகினாலும் அது நடத்துவதற்கேற்ற உதவி புரியும் சிரஞ்ஜீவி நேமம் சுப்ரமண்யத்தை மறப்பதற்கில்லை. கலங்கியகாலத்தில் தைர்ய லக்ஷ்மியுடன் இதை நடத்த முன்வந்த ஸ்ரீ மீனாக்ஷி அச்சகத்தாருக்கும் பூர்ண ஆசீர்வாதமும் நன்றியும் உரியதாம். சிறந்த முறையில் விஷயதாநம் செய்தோருக்கு நமஸ்காரம். எல்லோருக்கும் நன்மைபுரிய இறைவனை வணங்குகிறோம்.

**ஆசிரியர்.**

---

## துலாமாஸ வ்ரத பண்டிகைகள்.

1. இம் மாதம் 30 நாட்களும் காலை ஸ்நாநம் ஸர்வ பாபங்களை அகற்றி ஸகல ஸம்பத்துகளையும் தரும். தென்னாட்டில் காவேரீ ஸ்நாநம் மிக விசேஷம். [ஸங்கல்பம் பூஜை அர்க்யம் காவேரீ சரித்ர சுருக்கம் தபால் செலவுடன் 20 நயாபைசா ஸ்டாம்பனுப்பி மாம்பலம் குருகுலத்தில் பெறலாம்.]

2. இம்மாதம் பருப்புகளை உண்ணக் கூடாது.

3. நீளமான கொம்பில் ராத்திரியில் தீபம் 30 நாளும் ஏற்றிவைப்பது யமதீபமாம். அதனால் யமபாதை இராது. வீட்டுவாசலில் தீபம் 30 நாளும் வைப்பது யமதீபம். அபமிருத்யு அகலும்.

4. **24உ நரகசதுர்தசி**—தைலத்தில் லக்ஷ்மியும் நீரில் கங்கையும் வருவதால் நரகபாதை இல்லாதிருக்க அன்று அதிகாலை தைலஸ்நானம் செய்ய வேண்டும். நாயுருவி இலைகளை நம் தலையைச் சுற்றி எறியவேண்டும். ஆலயத்திலும் வீட்டிலும் தீபத்தை வரிசையாக ஏற்றிவைக்கவேண்டும். அதுதான் தீபாவளி. நரகாசுரனைக் கொன்று கிருஷ்ணன் வெற்றி பெற்ற நாளுமது.

**27உ யமத்விதீயா**—அன்று பகலில் யமனுக்குப் பூஜைசெய்து நம் ஸஹோதரிகளுக்கு சீரளித்து அவள் வீட்டில் சாப்பிடவேண்டும்.

---

**புத்ரர் உண்டா? ஸித்தியிடம் பிறந்த புத்ரன் க்ஷேமன்.**

# மாதாந்தர தார்மிகச் செய்தி.

1. ஆவணிமீ 30உ முதல் ஸ்ரீ பரமாசார்யாள் உத்தரவுப்படி உபாத்யாயர்களுக்கு ப்ரயோக க்ஞானத்தை விருத்தி செய்ய மாம்பலம் குருகுலத்தில் ஒரு வகுப்பு நடக்கிறது.

2. புரட்டாசிமீ 2உ முதல் ஒருவாரம் அத்வைத ஸபையின் 64-வது ஸதஸ், மைலை ஸம்ஸ்க்ருத காலேஜில் ஸ்ரீ பரமாசார்யாள் முன்னிலையில் நடைபெற்றது.

3. புரட்டாசிமீ 11உ விச்வரூப யாத்ரை ஸ்ரீ ஜகத்குரு திருவல்லிக்கேணி சென்றார்கள்.

**ஸ்ரீ ஜகத்குருவால் சென்னை அடைந்த லாபம்:** ஏவிளம்பி நவராத்ரியில் சென்னை விஜயம். 1. பூஜை, ஆசார்யதரிசனம், உபதேசமொழி முதலிய பாக்யம் பெறுகிறது. 2. வயதாகியும் பூணல் போடாதவர் நூற்றுக்கு எண்பது பேர் பூணல் போட்டனர். 3. பல மடங்களிலும் ஆலயங்களிலும் கும்பாபிஷேகம் நடந்தது. 4. ப்ரயோக பாடசாலை, வேதபாடசாலை ஒவ்வொரு பேட்டையிலும் தோன்றின. 5. வயதாகி ஏழ்மையால் விவாஹமாகாத பெண்கள் விவாஹத்திற்காக ஒரு கமிட்டி ஏற்படுத்தி சில விவாஹம் நடந்தன. 6. ஓரியண்டல் ஸ்கூல்-ஸம்ஸ்க்ருத ப்ரதானமான ஆங்கில ஸ்கூல் நடக்கிறது.

**மதுரை பிராம்மண இளைஞர் சங்கம்:** ஏழைச் சிறுவர்களுக்கு இலவசமாக புத்தகமளிக்கின்றது. பெண்களுக்கு வேறு, மாணவர்க்கு வேறு ஸம்ஸ்க்ருத வகுப்பு நடத்துகிறது. அநாதை ப்ரேதஸம்ஸ்காரம் செய்கிறது. பண்டிதர்களைக் கொண்டு தர்மப்ரசாரம் செய்கிறது. நமது ஆசிரியர் 10 உபன்யாஸம் செய்தார்.

ஆனியில் பக்ஷிதீர்த்தம் ப்ரம்மஸ்ரீ சுப்ரமண்ய தீக்ஷிதர் பாலாற்றங்கரையிலும், ச்ரௌதரத்நம் ப்ருமஸ்ரீ நெ. ராமநாத சிரௌதிகளின் புத்ரரும் மாப்பிள்ளையும் மாயூரம் காவேரிக் கரையிலும் ஸோமயாகம் செய்தார்கள்.

ஆவணியில் திப்பிராஜபுரம் ப்ரும்மஸ்ரீ நாராயணஸ்வாமி சிரௌதிகள் த்வாதசார்த்ரமெனும் 37 நாள் யாகத்தை விஷ்ணம்பேட்டையில் நடத்தினார்.

# புத்தக அறிமுகம்.

1 **வேதபாதஸ்தவம்:** 94 பக்கம், விலை ரூ. 1—4—0. ஸ்ரீ ச்ருங்கேரி மடம் பிரசுரதார். — ஸ்ரீ மடம், கடூர் ஜில்லா, மைசூரில் கிடைக்கும். ஜைமினிமுனிவர் 4வது பாதத்தில் வேத மந்த்ரத்தை அமைத்துக்கூறிய சுலோகங்கள் 126. ஸ்ரீ ச்ருங்கேரி ஜகத்குரு ஸ்ரீமத் அபிநவ வித்யா தீர்த்த மஹாஸ்வாமிகள் ஸ்ரீமுகம். தமிழிலும் ஆங்கிலத்திலும் அர்த்தம். விரிவான ஆராய்ச்சியுள்ளது. மிகச் சிறந்த நூல். பக்தருக்கு அவச்யமானது.

2. **ஸத்ய விஜயம்:** விலை ரூ. 1—0—0. 146 பக்கம். ஆசிரியர், ஸ்ரீ K. கோபாலகிருஷ்ணன், 10/29 தலைவிரிச்சான் தெரு, மேலமாசி வீதி, மதுரை. இதிகாச புராணங்கள் எல்லாம் ஒரே வேதாந்த தத்வத்தை விளக்குபவை என அரும்பாடுபட்டு விளக்கி இருக்கிறார். வேதாந்திகளுக்குப் பயன்படும் நூலிது.

---

**புத்திமூலம் விநாயகருக்கு உண்டானவர் லாபன்.**

# ஆயுஷ்ய ஸூக்தம்.

★ ★ ★ ★

[அத்வைத ஸபா பண்டிதர் ப்ரும்மவித்யா பத்ராசிரியர் சென்னை ஸர்வ கலாசாலை ஸம்ஸ்க்ருத ஆராய்ச்சியாளர் பண்டிதராஜ் ப்ரும்மஸ்ரீ ப்ராந்தியங்கரை ஸுப்ரமண்ய சாஸ்த்ரிகள், M. O. L. அவர்கள் எழுதியது.]

[நமது பத்ரிகைக்கும் நமக்கும் ஆயுஸ் வ்ருத்தி ஆவதற்காக பன்னிரண்டாம் ஆண்டு முதலில் ஆயுஷ்யஸூக்தத்தைப் பிரசுரிக்கிறோம். இதை மனப்பாடம் செய்து நித்யம் காலையில் ஜபிக்கவும். ஆண்டுநிறைவில் இம்மந்த்ரத்தினால்தான் ஹோமம்செய்கிறோம். ஹோமம் செய்யும்போது ஸ்வாஹா எனக்கூறவேண்டும்.]

இது புருஷஸூக்தம், ஸ்ரீஸூக்தம் போல் வேதத்தில் உள்ள ஸூக்தம். ஸு+உக்தம் எனில் தேவதையைக் குறித்து நன்கு கூறப்பட்ட மந்த்ரம் எனப் பொருள். [ஆயுளைத் தருவதால் ஆயுஸ்ஸூக்தம் எனப்படும்.]

எவ்வளவு அழகாயிருந்தாலும் மனிதர் சொல்லில் ஸூக்தம் என்பதில்லை. வைதிக மந்த்ரங்களுக்கே உரியது அது. இது கிலம் எனப்படும். இங்ஙனம் பல மந்த்ரங்கள் உள. இப்போது கற்கும் வேதத்தில் இது சேராதது ஆதலால் ஸ்வரமில்லை. பழக்கத்தில் ஏகஸ்வரமாகக் கூறுவர்.

நீண்ட ஆயுளை விரும்புபவர் இதைக்கொண்டு அக்னியில் நெய்யால் விதிப்படி ஹோமம் செய்யவேண்டுமென போதாயன ரிஷி க்ருஹ்ய ஸூத்ரத்தில் கூறியிருக்கிறார்.

முதல் மந்த்ரம் பரமஸிவனைப் பற்றியது. ஸம்ஹார மூர்த்தியான அவரை, அவரது எட்டு உடல்களில் ஒன்றான அக்னியில் இதைச்சொல்லி நெய் ஹோமம் செய்தால் ஸந்தோஷப்பட்டு ஆயுளைத் தருவார். ஆசுதோஷர் விரைவில் ஸந்தோஷிப்பவர். ஸஹமாநாய – நமது குற்றங்களைப் பொறுத்து பலனளிப்பவர். இத்தகையவர் வேறு ஒருவர் இல்லை.

1. योब्रह्मा ब्रह्मण ऊज्जहार प्राणैः शिरः कृत्तिवासाः पिनाकी ।
ईशानो देवः सन आयुर्दधातु तस्मै जुहोमि हविषा घृतेन ॥

யோ ப்ரும்மா ப்ரும்மண உஜ்ஜஹார ப்ராணை: ஸிர: க்ருத்திவாஸா: பிநாகீ | ஈஸாநோ தேவ: ஸந ஆயுர்ததாது தஸ்மை ஜுஹோமி ஹவிஷா க்ருதேந || (உஜ்ஜபார என்றும் பாடமுண்டு.)

---

ஏன் ஒருதந்தம்? ஒன்றைமுறித்து எழுத்தாணியாக்கினார்

எந்த பரமசிவன் ப்ரும்மாவின் தலையை ப்ராணபாநாதிகளுடன் கூட கிள்ளி எரிந்தாரோ அவரை நாடி நெய்யால் ஹோமம் செய்கிறேன். அவர் யானைத்தோலையணிந்தவர். பிநாகமெனும் வில்லை ஏந்தியவர். ஸர்வேஸ்வரன். காந்தியுள்ளவர். அவர் என் ஆயுளை வ்ருத்திசெய்யட்டும். உஜ்ஜபாரா என்பதற்கும் இதேதான் பொருள்.

2. विभ्राजमानः सरिरस्य मध्या द्रोचमानो घर्मरुचिर्य आगात् ।
स मृत्यु पाशानपनुद्य घोरानिहायुषेणो घृतमत्तु देवः ॥

விப்ராஜமாந: ஸரிரஸ்ய மத்யாத் ரோசமாநோ கர்மருசிர்ய ஆகாத் | ஸ ம்ருத்யு பாஸாந் அபநுத்ய கோராந் இஹாயுஷேணோ க்ருதமத்து தேவ: ||

எவர் உலக ஸ்ருஷ்டி காலத்தில்: பகவான் பஞ்ச மஹாபூதங்களைப் படைத்தபின், உலகெலாம் ஒரே ஜலமயமாக இருக்க அந்த ஜலத்தின் நடுவிலிருந்து ஸூர்யன் போல் ஜ்வலிக்கும் உடலுடன் ப்ரகாசித்துக்கொண்டு எழுந்தாரோ அந்த ஹிரண்யகர்ப்பனெனும் ப்ரும்மா நமது கோரமான யமபாஸங்களை அறுத்து நமக்கு ஆயுஸ்ஸைக் கொடுக்கட்டும். அவர்பொருட்டு ஆஜ்யாஹுதி செய்கிறோம். யமபாசமென்பதற்கு பசிதாஹம் என்றும் பொருளுண்டு.

3. ब्रह्म ज्योतिर्ब्रह्म पत्नीषु गर्भं यमाधधात् पुरुरूपं जयन्तं ।
सुवर्णरं भग्रह मर्कमर्च्यं तमायुषे वर्धयामो घृतेन ॥

ப்ரும்ம ஜ்யோதிர் ப்ரும்ம பத்நீஷு கர்ப்பம் யமாததாத் புருரூபம் ஜயந்தம் | ஸுவர்ணரம் பக்ரஹ மர்கமர்ச்யம் தமாயுஷே வர்த்தயாமோ க்ருதேந ||

பரமசிவன் அம்பிகையிடம் ஜயந்தன் என்று வேதத்தில் அழைக்கப்படுபவரும் பல ரூபங்களை எடுக்கும் ஸாமர்த்யமுள்ளவருமான ஸ்கந்தனெனும் எந்தக்குழந்தையை உண்டுபண்ணினாரோ, ஸ்வர்ணம்போல் ப்ரகாசிப்பவரும் மநுஷ்ய உருவமுள்ளவரும் க்ருத்திகா நக்ஷத்ரங்களால் வளர்க்கப்பட்டவரும் ஸூர்யன்போல் தேஜோமயமாக இருப்பவரும் பூஜிக்கத்தக்கவருமாயுள்ள ஸ்கந்தனை ஆஜ்யத்தால் ஸந்தோஷப்படுத்துகிறேன்.

---

**வியாசர் கூறிய மாபாரதத்தை எழுதினர்.**

4. श्रियं लक्ष्मी मौबला मंबिकां गां षष्ठींच यामिन्द्र सेनेत्युदाहुः ।
तां वियां ब्रह्मयोनिं सरूपामिहायुषे तर्पयामो घृतेन ॥

*ச்ரியம்லக்ஷ்மீ மௌபலாம் அம்பிகாம்காம் ஷஷ்டீஞ்ச யாமிந்த்ர ஸேநேத்யுதாஹு:। தாம் வித்யாம் ப்ரும்ம யோநிம் ஸரூபா மிஹாயுஷே தர்ப்பயாமோ க்ருதேந ॥*

யாரை ஸ்ரீ லக்ஷ்மீ, ஔபலா, அம்பிகா, கா, ஷஷ்டீ, இந்த்ரஸேனை என்றும் அழைக்கிறார்களோ ப்ரும்மவித்யையாயும் ப்ரும்மத்திற்குக் காரணமாயும் ப்ரும்மத்திற்கு ஸமமான ரூபமுள்ளதாயுமிருக்கின்ற அந்த அம்பாளை ஆயுஸ்ஸின்பொருட்டு ஆஜ்யத்தால் த்ருப்தி செய்கிறேன்.

5. दाक्षायण्यः सर्वयोन्यः सयोन्यः सहस्रशो विश्वरूपा विरूपाः ।
स सूनवः सपतयः सयूथ्यः आयुषेणो घृतमिदं जुषन्ताम् ॥

*தாக்ஷாயண்ய: ஸர்வ யோன்ய: ஸயோன்ய: ஸஹஸ்ரசோ விஸ்வரூபா விரூபா:। ஸ ஸூநவ: ஸபதய: ஸயூத்ய: ஆயுஷேணோ க்ருதமிதம் ஜுஷந்தாம் ॥ [ஸ யோன்ய: என்றும் சிலர் சொல்வதுண்டு.]*

தக்ஷருடைய பெண்கள் 16 பேர். இவர்கள் ஸகல ஜகத்திற்கும் காரணமானவர்கள். ஒரே தாயிடம் பிறந்தவர்கள். ஆயிரக் கணக்கான ரூபமெடுக்கும் ஸாமர்த்யம் உள்ளவர்கள். மிக்க அழகுள்ளவர்கள். இவர்கள் தங்கள் புத்ரர்களுடனும் பதிகளுடனும் தமக்கு வசமான தேவ கணங்களுடனும் கூட இங்கு வந்து என் ஆஜ்யத்தைப் பெற்றுக்கொள்ளட்டும். ஆயுளைக் கொடுக்கட்டும்.

6. दिव्या गणाः बहुरूपाः पुराणा आयुश्छिदोनः प्रमथ्नन्तु वीरान् ।
तेभ्यो जुहोमि बहुधा घृतेन मानः प्रजां रीरिषो मोत वीरान् ॥

*திவ்யா கணா: பஹுரூபா: புராணா ஆயுஶ்ச்சிதோந: ப்ரமத்நந்து வீரான் । தேப்யோ ஜுஹோமி பஹுதா க்ருதேந மாந: ப்ரஜாம் ரீரிஷோமோத வீரான் ॥*

---

ஶிவனது கணங்கள் ஸ்வர்க்கத்திலும் கைலாஸத்தி லும் இருப்பவர்கள். பலவகை ரூபமுள்ளவர்கள். மிகப் பழையவர்கள். அவர்கள் நமது ஆயுளை அபஹரிக்கும் வீரர்களை அழிக்கட்டும். அவர்பொருட்டு பலமுறை ஆஜ்ய ஹோமம் செய்கிறேன். நீங்கள் எங்கள் குழந்தைகளை யும் எங்களுக்கு ஸஹாயம் புரியும் வீரர்களையும் ஹிம் ஸிக்காதிர்கள்.

7. एकः पुरस्तात् य इदं बभूव यतो बभूव भुवनस्य गोपाः ।
यमप्येति भुवनं सांपराये सनोहविर्घृत मिहायुषेत्तु देवः ॥

ஏக: புரஸ்தாத்ய இதம் பபூவ யதோ பபூவ புவநஸ்ய கோபா: । யமப்யேதி புவநம் ஸாம்பராயே ஸநோ ஹவிர் க்ருத மிஹாயுஷேத்து தேவ: ॥

எந்த ஒரு பரமாத்மா உலக ஸ்ருஷ்டிக்கு முன் ஸூக்ஷ்ம ரூபமாக இருந்தாரோ எவரிடமிருந்து உலகைக் காப்பவர்கள் தோன்றினார்களோ ப்ரளய காலத்தில் உல கெலாம் எவரிடம் லயமாகிறதோ அவர் நமக்கு ஆயுளைக் கொடுக்கும்பொருட்டு நாம் அளிக்கும் ஆஜ்யத்தை ஏற்கட்டும்.

8. वसून् रुद्रान् आदित्यान् मरुतोथ साध्यान् ऋभून् यक्षान्
गन्धर्वांश्च पितॄंश्च विश्वान् । भृगून् सर्पांश्चांगिरसो थ सर्वान्
घृतं हुत्वा स्वायुष्या महयाम शश्वत् ॥

வஸூந் ருத்ராந் ஆதித்யாந் மருதோத ஸாத்யாந்
ருபூந் யக்ஷாந் கந்தர்வாம்ஶ்ச பித்ரூம்ஶ்ச விஶ்வாந் ।
ப்ருகூந் ஸர்பாம்ஶ் சாங்கிரஸோத ஸர்வாந் க்ருதம்
ஹுத்வா ஸ்வாயுஷ்யா மஹயாம ஶஶ்வத் ॥

8 வஸுக்கள், 11 ருத்ரர்கள், 12 ஆதித்யர்கள், 49 மருத்துக்கள், ஸாத்யர்கள், ரிபுக்கள், யக்ஷர்கள், கந்தர் வர்கள், பித்ருக்கள், 13 விஶ்வேதேவர்கள், ப்ருகுவம்ஶத் தவர், ஸர்ப்பங்கள், ஆங்கிரஸ வம்ஶத்தவர் ஆகிய எல்லோ ருக்கும் ஆஜ்ய ஹோமம் செய்து பூர்ணமான ஆயுஸ்ஸால் நாம் ஸந்தோஷமாக விளங்குவோமாக.

1. பரமசிவம், 2. ஹிரண்யகர்ப்பன். 3. ஸுப்ரமண்யன், 4. ப்ரும்ம வித்யாம்பிகை, 5. தக்ஷகன்யகைகள், 6. சிவகணங்கள், 7. பரமாத்மா, 8. வஸுமுதலிய ஸமஸ்த தேவர்கள்.

---

பெற்றோரே முதல் தெய்வ மென்றவரவர்.



# தைத்திரீய உபநிஷத்.

(ஆனந்தவல்லீத் தொடர்ச்சி)

स य एवं वेद । अस्माल्लोकात्प्रेत्य । एतमन्नमय मात्मानमुप संक्रामति । एतं प्राणमय मात्मानमुप संक्रामति । एतं मनोमय मात्मानमुप संक्रामति । एतं विज्ञानमय मात्मानमुप संक्रामति । एत मानन्दमय मात्मानमुप संक्रामति ॥

**यः एवं वेदः** -எவன் இம்மாதிரியறிவானோ **सः** -அவன் **एतं अन्नमयं आत्मानं** - இந்த அன்னமயமான ஆத்மாவை **उपसंक्रामति** - அடைகிறான். **एतं प्राणमयं आत्मानं उपसंक्रामति** - இந்த ப்ராணமயமான ஆத்மாவை அடைகிறான். **एतं मनोमयमात्मानं उपसंक्रामति** - இந்த மனோமயமான ஆத்மாவை அடைகிறான். **एतं विज्ञानमयं आत्मान मुपसंक्रामति** - இந்த விக்ஞானமயமான ஆத்மாவை அடைகிறான். **एतं आनन्दमयं आत्मानं उपसंक्रामति** - இந்த ஆனந்தமயமான ஆத்மாவை அடைகிறான். **तदप्येषः श्लोको भवति** - இந்த விஷயமான ஶ்லோகமிருக்கிறது.

சிலர் புத்ரர் மித்ரர் மனைவி இவர்களை ஆத்மாவாக எண்ணி அவர்கள் சுகத்தைத் தன் சுகமாகவும் அவர்கள் துன்பத்தைத் தன் துன்பமாகவும் நினைக்கிறார்கள், பெரும்பாலோர் அன்னமயமான உடலையும் பிராணனையும் மனதையும் விக்ஞானத்தையும் ஆனந்தத்தையும் ஆத்மாவாகக் கருதுகிறார்கள். இவைகள் சாதாரணமானவை. முக்ய ஆத்மா அல்ல.

தேஹம் முதலிய 5 கோஶ ரூபமான குஹையில் உள்ளே அமர்ந்து பேரானந்த வடிவனான முக்ய ஆத்மாவை

---

**பெற்றோரை வலம்வந்து 7 பூப்ரதக்ஷிண பலன் பெற்றார்**

அடைந்தவனுக்கே பிரும்மாநந்தம் உண்டாகும்: உபாஸகன் முதலில் அன்னமயாதிகளை ஆத்மாவென்று நினைத்தாலும் ஞானம் வந்தபின் அந்த எண்ணத்திலிருந்து திரும்பி அதற்குமேலுள்ளதை ஆத்மாவாகக்கருதுகிறன். ஆநந்தமயத்தைத் தாண்டி முக்யாத்ம ஆநந்தத்தை அறிபவனுக்குண்டாகும் ஆநந்தம் வாக்கிற்கும் மநிற்கும் எட்டாததாகும். அதையே அடுத்த அநுவாகம் வர்ணிக்கிறது.

**எட்டாவது அநுவாகம் முற்றிற்று.**

**ஒன்பதாவது அநுவாகம்.**

**यतो वाचो निवर्तन्ते । अप्राप्य मनसा सह आनन्दं ब्रह्मणो विद्वान् । न बिभेति कुतश्चनेति ।**

**यतः** – எந்த ப்ரும்மத்தினிடமிருந்து **वाचः** – வாக்குகள் **मनसा सह** -மனதுடன் கூட **अप्राप्य** - (அதை) அடையாமல் **निवर्तन्ते** – திரும்புகின்றனவோ **ब्रह्मणः** – அந்த ப்ரும்மத்தினுடைய **आनन्दं** — ஆனந்தத்தை **विद्वान्** — அறிந்தவன் **कुतश्चन** - ஒரு வஸ்துவினிடமும் **न बिभेति** — பயப்படுவதில்லை **इति** - என்று (சுலோகமிருக்கிறது).

வாக்குகள் எல்லாம் ஸவிகல்ப வஸ்துக்களில் - நாமரூபமுள்ள உலகில் பயனுள்ளதாகும். வாக்கு செல்லும் இடத்திலேயே மநமும் செல்லும். ஆத்மா நிர்விகல்பகமானது. அதனிடமும் சிலர் ஆத்மா பிரும்மம் என்ற சப்தத்தைக் கூறுகிறார்கள். இவை சுத்த பிரும்மத்தினிடம் செல்லாமல் அதையடையாமல் மநதுடன் கூடத் திரும்பி விடுகின்றன.

இத்தகைய பிரும்மத்தின் ஆநந்தத்தை அறிபவன் இப்பிறவியிலும் எப்பிறவியிலும் எந்த வகையான பயத்தையும் அடையமாட்டான். பயம் பிறரிடம் இருந்து வரும். ஆத்மஸ்வரூபத்தை உணர்ந்தவன் ஆத்மாவாகவே ஆகிவிடுவதால் வேறு இரண்டாவது வஸ்து இல்லாததால் அவனுக்குப் பயமில்லை.

---

**ஆதலால் முதல் பூஜை அவருக்கு ஏற்பட்டது.**

# ஸ்ரீ சங்கர உபதேச ரத்னம்.

**விவேக சூடாமணி.**—(புரட்டாசியீ தொடர்ச்சி.)

**பர**மாத்ம தத்வம் மிக ஸூக்ஷ்மமானது. ஸ்தூல த்ருஷ்டியால் ஒருபோதும் அடையமுடியாது. சுத்த புத்தியுள்ள ஆர்யன் ஸமாதியினால் மிகஸூக்ஷ்மமான புத்தியால் அதையறியவேண்டும்.

ஸுவர்ணத்தை மேலும் கீழும் தீயை வைத்து உருக்கினால் அதிலுள்ள மலமகன்று சுத்தமாகின்றது. அதேபோல் த்யாகம் செய்தால் தாமஸ ராஜஸ தோஷங்களை விட்டு மநம் ஸத்வகுணமுள்ளதாகும். அதே மநஶ்ஶுத்தி.

இடைவிடாமலப்யாஸம் செய்துவந்தால் பக்வமான மநம் பிரும்மத்தினிடம் லயமாகும். அப்போது நிர்விகல்பக ஸமாதி உண்டாகும். அதனால் அத்வயமான ஆநந்த ரஸாநுபவம் ஏற்படும்.

வேதாந்த ஶ்ரவணத்தைவிட நூறுமடங்கு சிறந்தது மநநம். மநநத்தைவிட லக்ஷம் மடங்கு நிதித்யாஸநம். அதைவிட நிர்விகல்பக ஸமாதி கணக்கே கூறமுடியாத அளவு சிறந்ததாகும்.

நிர்விகல்பக ஸமாதியினால் தான் நிச்சயமாக ப்ரும்ம தத்வம் அடையமுடியும். வேறு வழியில்லை. மநம் சஞ்சலமானது. வேறெண்ணங்கள் குறுக்கிட்டு பல விக்நங்கள் உண்டாகும்.

ஆதலால் இந்திரியங்களை அடக்கி பரமாத்மாவிடம் ஸமாதியிலீடுபடு. ஸதா ஆத்மா ஒன்றுதான் என்ற த்ருஷ்டியால் அக்ஞாநத்தை நாஶம் செய்வாய். யோகத்திற்கு முதல் வாசற்படி வாக்கை அடக்குவது. எதையும் ஏற்காமலிருப்பது. எதிலும் ஆசை இல்லாமலிருப்பது. மநதால் எதையும் கோராமலிருப்பது. எப்பொழுதும் ஏகாந்தமாக இருப்பது.

இந்திரியங்களை அடக்க ஏகாந்தமாயிருத்தலே ஸாதநம். இந்திரிய ஜபம் மநதை அடக்கக் காரணம். மந

---

**கல்லாலும் மண்ணாலும் மஞ்சளாலும் சாணியாலும்**

அடக்கத்தினால் அஹங்கார வாஸனை அழியும். அதனால் ஸதா ஆநந்தரஸாநுபவம், ப்ராம்மீ நிலை ஏற்படும்.

வாக்கை மனதிலும் மனதை புத்தியிலும் புத்தியை புத்திஸாக்ஷியினிடமும் அதை ஆத்மாவினிடமும் லயப்படுத்தி பரம சாந்தியை அடை.

வைராக்யம் க்ஞானம் என்ற இரண்டும் பக்ஷியின் இரு ரக்கைகள் போலாம். இவ்விரண்டுமில்லாமலோ அல்லது ஒன்றினாலோ முக்தி எனும் மாடியைப் பெற முடியாது.

சிறந்த வைராக்யத்தால் தான் ஸமாதி. ஸமாதியினால் தான் த்ருடமான க்ஞானம். தத்வ க்ஞானிக்கே பந்த மோக்ஷம். மோக்ஷமுள்ளவனுக்கே நித்ய ஸுகாநுபவம் உண்டாகும்.

விஷத்திற்கு ஸமம் விஷயம். அதில் ஆசையை விடு. ஆசையே மிருத்யு. உன் ஜாதி குலம் ஆஶ்ரமம் முதலியவைகளில் அபிமானத்தை விடு. கர்மாக்களையும் விடு. உடலை ஆத்மாவாக எண்ணாதே. ஸதா ஆத்மாவினிடமே புத்தியை செலுத்து. உன்னையே ப்ரும்ம ஸ்வரூபியாகக் காண்பாய்.

ஆத்மாவைத் தவிர மற்ற சிந்தை அழுக்குள்ளது. துக்ககாரணமானது. அதை விடு.

இந்த ஆத்மா ஸ்வயம் ப்ரகாசமானது. எல்லாவற்றிற்கும் ஸாக்ஷி. விக்ஞான கோஶத்தில் ஸதா ப்ரகாஶிப்பது. அஸத் விலக்ஷணமானது. இதைக் குறியாகக் கொண்டு அகண்ட வ்ருத்தியால் ஆத்மாவையே நினை.

உடலில் நான் என்ற எண்ணத்தை விடு. அதில் உதாஸீநனாக இரு. ஶுத்தமானதை ஸ்வஸ்வரூபமாய் க்ஞான மாத்ரமாயுள்ள ஆத்மாவினிடம் கொஞ்சம் கொஞ்சமாக வை. அசையாமல் அங்கேயே இருக்கும்படி செய் நானே ஆத்மா என்ற முடிவு ஏற்படும்.

பானை சொம்பு தோம்பை ஊசிநுனி முதலியவைகளால்ஒன்றான ஆகாஶம் வெவ்வேறாகக் கூறப்படுகிறது அதேபோல் ப்ரும்மா முதல் சிறிய ப்ராணி வரையிலுள்ள பேதமெல்லாம் பொய்யே. அவை உபாதிகளே .ஆத்மா ஒருவன். பூர்ணன் என அறி.

---

**சந்தனத்தாலும் வெல்லத்தாலும் விநாயகரைச் செய்வர்·**

# பால பாரதம்.

**யக்ஷ ப்ரச்னம்.** *(ஆவணிமீ தொடர்ச்சி)*

யக்ஷன்: ஶமம் என்பதென்ன ?
தர்மர்: மநதிற்கு ஏற்படும் சாந்தியே ஶமம்.
ய: தயை எனில் என்ன ?
த: எல்லோரிடமும் அன்பாயிருப்பதே.
ய: ருஜுவாக இருப்பதென்ப தென்ன ?
த: எல்லோரிடமும் ஸமமான எண்ணம் கொள்வது.
ய: ஜயிக்கமுடியாத ஶத்ரு யார் ?
த: கோபமே ஜயிக்கமுடியாத ஶத்ரு.
ய: முடிவில்லாத வியாதி எது ?
த: லோபமே.
ய: ஸாது என்பவர் யார் ?
த: ஸர்வ ப்ராணிகளுக்கும் ஹிதமானவர்.
ய: துஷ்டன் யார் ?
த: தயையில்லாதவனே துஷ்டன்.
ய: மோஹமென்ப தென்ன ?
த: தர்மம் தெரியாமையே மோஹம்
ய: கர்வமென்ப தென்ன ?
த: அளவுகடந்து தன்னை மதிப்பது.
ய: ஆலஸ்ய மென்பதென்ன ?
த: தர்மத்தை விடுவதே ஆலஸ்யமாம்.
ய: ஶோகம் என்பது யாது ?
த: அறிவில்லாமையே.
ய: ஸ்திரம் என்பதென்ன ?
த: தர்மத்தை விடாமல் செய்வது ?
ய: தைர்ய மென்பது யாது ?
த: இந்திரியங்களை ஜயிப்பது.
ய: த்யாக மென்று லென்ன ?
த: மநதின் மலத்தை அகற்றுவது.
ய: தாநமென்று லென்ன ?
த: ப்ராணிகளை ரக்ஷிப்பது.
ய: யார் பண்டிதன் ?

---

**ஏன் ? அவர் எல்லாமாக இருப்பதால் அப்படி**

த: தர்மத்தை அறிந்து செய்பவன்.
ய: நாஸ்திகன் யார்?
த: மூர்க்கனே.
ய: காமமென்பது எது?
த: ஸம்ஸாரத்தை உண்டுபண்ணி வளர்ப்பது.
ய: மாத்ஸர்ய மென்பதென்ன?
த: மநதில் தாபத்தை உண்டுபண்ணுவதே.
ய: அஹங்கார மென்பதென்ன?
த: தன்னை மஹாத்மாவாக கருதுவது.
ய: டம்பம் என்பதென்ன?
த: தான் தர்மம் செய்வதாக பிரகாசப்படுத்திக் கொள்வது
ய: எது தெய்வம்?
த: நாம் செய்த தானத்தின் பலனே.
ய: கோள் சொல்வதென்பதென்ன?
த: பிறரை தூஷிப்பதே.
ய: பரஸ்பர விரோதமுள்ள தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்பவை எப்படி ஒன்று சேரும்?
த: தர்மமும் மனைவியும் ஒன்று பட்டால் அவைகள் ஒன்று சேரும்.
ய: எதனுல் அக்ஷயமான நரகம் உண்டாகும்?
த: (1) யாசக பிராம்மணனைத் தானே அழைத்துத்தருகிறேன் என்று கூறி ஏமாற்றுவதும் (2) வேதம் தர்ம சாஸ்த்ரம் பிராம்மணன் தேவர் பித்ருக்கள் ஆகிய இவைகள் பொய் என்பதும் இவைகள் விஷயமாகப் பொய் கூறுவதும் (3) பொருளுள்ள பொழுது லோபத்தினுல் தானம் செய்யாமலிருப்பதும் தான் அநுபவிக்காமலிருப்பதும் யாசகருக்கு அப்புறம் தருகிறேன் என்பதும் இல்லை என்பதும் அக்ஷயமான நரகமளிக்கும் பாபங்கள்.
ய: பிராமண்யம் என்பது குலத்தினுலா? ஆசாரத்தினுலா? வேதாத்யாயத்தினுலா?
த: பிராம்மண குலத்தில் பிறந்ததனுல் மாத்ரம் பிராம்மணனல்ல. வேதாத்யநத்தாலும் மற்ற சாஸ்த்ரத்தாலும் பிராம்மணனுக மாட்டான்.

---

எல்லா பத்ரங்களாலும் பூஜை செய்கிறோம்.

தியாகோப
நிஷத்




[ஸ்ரீ T. S. பாலகிருஷ்ணசாஸ்திரி.]

[இந்தத் தலைப்பைப் படித்ததும் ஏதோ பகவத்கீதையின் தாத்பர்யத்தை இங்கு விளக்கப்போகிறேன் என்று நினைக்கலாம். அதுவன்று. நாதோபாஸகரும், சிறந்த ராமபக்தருமான பஞ்சநத க்ஷேத்ரவாஸி ஸ்ரீ தியாகய்யரின் ப்ரபலமான 'கீதார்த்தமு' என்ற சுருட்டி ராக கீர்த்தனையில் த்வனிக்கும் ஓர் அபிப்ராயத்தையே குறிக்க விரும்புகிறேன்.]

ராகம்: சுருட்டி.] [தாளம்: ஆதி.

பல்லவி

**கீதார்த்தமு ஸங்கீதா னந்தமு**
**நீதாவுன சூடரா ஓமனஸா.**

இது பல்லவி. "கீதை உபனிஷதாதிகளின் உட்பொருளும் கான வித்தையினால் ஏற்படுகிற உண்மை அனுபவமும் ஸ்ரீ ராமா உன்னிடமே விளங்குகிறது. ஏ! மனமே! இதை நீ அறிந்துகொள்!" என்ற பொதுவான கருத்துடன் கீழ்க்காணும் அபிப்பிராயத்தையும் சேர்த்து கவனம் கொள்க.

**கீதார்த்தமு**—க்ருதி, கீர்த்தனை இவைகளைவிட, கீதம் என்பது உள்ளுணர்வால் நெகிழ்ந்து, ஸ்வானுபவத்துடன் பக்தி பரவசம் ததும்ப இசைப்பதாகும். ஸ்ரீ ராம ஸந்நிதியில் நித்திய பூஜாகாலங்களில் பக்தி மணம் கமழும் பாமாலை தொடுத்தவரன்றோ தியாகய்யர்! நாட்டு மன்னர்கள் காத்திருக்கும், பேரவைகள் அழைத்தும், பிரபுக்கள் பலர் வேண்டி நின்றும், தன் அபரிமிதமான கான வர்ஷத்தை அவர்கட்கு உதவாதிருந்த இக்கிஷ்ப்ருஹரின் நிலைமை (துறவு மனம் கொண்டவரை) யார் அறிய இயலும்? அதுவும் இக்கலியில்! பல்லாயிரர் கேட்டும், புகழ்ந்தும், போற்றினும் பயன் என்ன? இது ஒரு பெருமையா? பெருமை எல்லாவற்றினும் பெருமை! இதோ தெரியவருகிறது.

---

**அநுபல்லவி**

ஸீதாபதி சாணுப்றமு னிடுகொன்ன
வாதாத்ம ஜுனிகி பாக தெலுஸுரா. (ஸீ)

என்ற அநுபல்லவியில், தான் அடைந்த பெரும் பேற்றை நன்கு அறிந்து அருள்பவன் அந்த ஆஞ்ஜநேயப் பெருந்தகை என்கிறார். அன்றன், முன்பு ஸ்ரீ ராமாவதாரத்தில் ஸீதாபதிக்கு ஸேவை புரிந்து, பின்பு ஸ்ரீ ராம சரணகமலங்களை இடைவிடாது த்யானம் செய்து வருகிறன். லோக க்ஷேமத்தைக் கருதி, ஸ்ரீ ராமாக்ஞை பெற்று, கந்தமாதனத்தில் தவக்கோலம் கொண்டு, வைகுண்டமும் விரும்பாதவன்.

**சரணம்**

ஹரிஹர பாஸ்கர காலாதி கர்மமு
லனு மதமுல மர்மமுல னெறிங்கின
ஹரிவர ரூபுடு ஹாஹய விநுதுடு
வர தியாகராஜ வரதுடு ஸுகிரா. (ஸீ)

சைவம், வைஷ்ணவம், ஸௌரம் முதலிய பல மதங்களின் ரஹஸ்யத்தை நிர்ணயம் செய்துகொண்டவன். கால தர்மங்கள், யுக தர்மங்கள் இவைகளின் போக்கை அறிந்து, தன் ஸ்வய (வானர) ரூபத்தையும் சக்தியையும் சுருக்கிக்கொண்டு, அடியார்க்கு இனிய துணையாகுபவன். ராமகீர்த்தனம் நடக்கும் ஒவ்வோர் இடம்தனிலும், மறைமுகமாக நின்று அநுக்ரஹிப்பவன். ராமநாம ருசியறிந்த சிவபெருமானும், இந்திராதி தேவர்களும் ப்ரியமுடன் போற்றுபவன். இத்தகைய மஹாத்மா இதோ! இங்கே! ராம ஸந்நிதியில் விளங்குவதில் ஐயமேது? தியாகய்யர் போன்ற உண்மை பக்தர்களின் அந்தரங்கத்தை அறிந்து கொள்ளக்கூடியவன் அவனே யன்றி வேறொருவர் யார்?

[ஆஞ்ஜனேயப் பெருமான்போல் நிஷ்காம பக்தியுடன் பஜனம்செய்து ஆத்மானந்தம் பெறவேண்டுவதே இக்கீர்த்தனத்தின் தாத்பர்யமாகும்.]

---

**ஏன் மோதகம் அவில் பொரி அவருக்கு முக்யம்?**

# ஸ்த்ரீ தர்மம்.

## திரௌபதீ ஸத்யபாமா ஸம்வாதம்.

ஸத்யபாமா: அம்மா! வெகுநாளாக ஒரு விஷயம் உன்னைக் கேட்க அவா. இப்போதுதான் ஏகாந்தமாயிருக்கிறாய்.

திரௌபதி: அதற்கென்ன தாராளமாகக் கேள்.

ஸத்: மற்றவர்களைப்போலில்லாமல் தெய்வச்செயலால் நீ ஐந்து புருஷர்களுக்கு மாலையிட்டாய்.

தி: அது பூர்வஜந்ம விஷயம்! உலகறிந்தது தானே?

ஸத்: ஐவரும் உன்னிடத்தில் ஒரேமாதிரி அன்பாக இருக்கிறார்களே! வேறு மனைவி இல்லாததாலா?

தி: உனக்குத் தெரியாதா? ஐவருக்கும் தனித்தனி ஐந்து மனைவிகளிருக்கின்றனரே! நான் பொது.

ஸத்: உன்னிடத்தில் அனைவரும் தன் உயிரைவிட அதிக ஆசை வைத்திருக்கின்றனரே! நீ எப்படி அவர்களை வச்யமாக்கிறாய்? மருந்து ஏதேனும்.........

தி: சிவ! சிவ!! என்ன சொன்னாயம்மா! அது நீசமான ஸ்த்ரீகள் செய்யும் வேலையல்லவா?

ஸத்: நம்மிடம் வசமாக அப்படிச்செய்தாலென்ன பாவம்

தி: நமது மாங்கல்யத்திற்கே அது தீமை யாகுமே!

ஸத்: வேண்டாம்! ஏதேனும் வச்ய மந்த்ரமுண்டோ?

தி: நாராயணா! அது யார்செய்கிற வேலை? நம்போன்றவர் அதை நினைக்கலாமா?

ஸத்: எந்த தேவதையையேனும் பூஜிக்கிறாயா?

தி: நம் தேவதை பதி இருக்க வேறு யாரை பூஜிப்பது?

ஸத்: ஏதேனும் விரதம் செய்கிறாயா?

தி: பதி விரதம் தவிர நானொரு விரதமுமறியேன்!

ஸத்: உபவாஸமிருந்து வசப்படுத்துகிறாயா?

தி: பதி உத்தரவின்றி உபவாஸம் இருந்தால் அவர் ஆயுளுக்கன்றோ ஆபத்து! அவர்கள் செய்யும் உபவாஸத்தையே நானும் அநுஷ்டிக்கிறேன்.

ஸத்: ஏதேனும் ஹோமம் செய்தனையோ?

தி: நமக்கேது ஹோமம் செய்ய அதிகாரம்?

ஸத்: பின் எதனால்தான் உன்னைவிட்டு ஒரு க்ஷணமேனும் பிரியாமல் இருக்கச் செய்தாய்?

---

அண்டம் மோதக மாவு. பூரணம் பூர்ண விநாயகர்.

ஸ்ரீ : இப்போது கேட்டதோ அதுதான் சரியானது!

ஸத் : ஆனால் அது என்ன செய்யவொணாக் கூறு!

ஸ்ரீ : லாபமாக வேண்டுமென விரும்புவதே தப்பு. மருந்திட்டால் புருஷர் பித்தனாவதும் பல நோய் வாய்ப்படுவதும் பிரத்யக்ஷம். மறு பிறவியிலும் மறு உலகிலும் மட்டுமின்றி துன்பம் உண்டாகும். முதலில் புருஷர் சொல்லை வேதவாக்காகக் கருது.

ஸத் : நாம் ஓரிடம் போக எண்ணுகிறோம். அது அவருக்கு இஷ்டமில்லை என்றால் என்செய்வது?

ஸ்ரீ : போகக் கூடாதுதான்! அப்படி பதி சொல்லை மீறி பிறந்த வீடு சென்றது நாகுவிசயமானி கதி?

ஸத் : நமக்கு ஒரு நகை வேண்டும்! புடவை வேண்டும் என ஆசை! அதை அவர் பூர்த்திசெய்யாவிடில்?

ஸ்ரீ : ஆடை ஆபரணம் அழகிற்காக! அழகை அநுபவிப்பவர் புருஷன்தானே! அவரதை இஷ்டப்படாவிடில், நாணம் அச்சம் அடக்கமெனும் சிறந்த ஆடை ஆபரணம் போதுமே!

ஸத் : சரி! அதுவேண்டாம்! காரணமின்றி நம்மீது கடிந்து விழுந்தாலோ?

ஸ்ரீ : அப்பொழுதுதான் நம் பொறுமையைக் காட்ட வேணும்! அதே உயர்ந்த கற்பு!

ஸத் : நாமும் மநுஷ்யான்தானே! நமக்கும் கொஞ்சம் ரோஷம் வருமோ இல்லையோ?

ஸ்ரீ : அதுதான் பிசகு! பலவிடம் சென்று பலவேலை செய்து பலகஷ்டங்களைப் பெற்றுவரும் பதியிடம் நமக்கு இரக்கமிருந்தால், ஐயோ! பாபம்! எங்கேயோ கஷ்டப்பட்டு வருகிறார்! என்ன துன்பமோ! காரணமின்றி எரிந்து விழுகிறார்! என்று எண்ணி நம் ரோஷத்தை அடக்கவேண்டும்.

ஸத் : அதனால் என்ன பலனுண்டாகும் என்கிறாய்?

ஸ்ரீ : குற்றமற்றவளிடம் நம் கோபத்தைக் காட்டினோமே! என்று மனம் நொந்து மறுமுறை என்ன கஷ்டம் நேர்ந்தாலும் நம்மிடம் எரிந்து விழார். இது தான் சாந்தமான வழி! சிறந்த மருந்து! உத்தம விரதம்! நல்ல தபஸ்!

---

அவிலும் பொரியும் வருத்த கெல். முனையாது.

தெய்வமே! எனது கால்கள் சுகாத இடங்களுக்கே செல்கின்றன. வாக்கோ பொய்யானதை தெரிந்தும் அதைப் பேசத் தயங்கவில்லை. புத்தியோ பிறரது தோஷத்தைத் தேடவே முயலுகின்றது. நான் செய்யவேண்டிய சத்கருமத்தில் நொண்டியாகவும், ஊமையாகவும் மிருகமாகவும் இருக்கின்றேன்.

३. यामाराद्ध्य नगणितमिदं जीवितं वा धनं वा
यस्याः प्रीति र्मनसि कलिता ज्यायसी मोक्षतोऽपि ।
सैवेदानीं वयसि चलिते संप्रहीणे च वित्ते
तूलायापि त्रिपुरहर मां मन्यते नैव भार्या ॥

யாமாராத்யும் நகணிதமிதம் ஜீவிதம் வா தநம் வா
யஸ்யா: ப்ரீதிர் மநஸி கலிதா ஜ்யாயஸீ மோக்ஷதோபி
ஸைவேதாநீம் வயஸிசலிதே ஸம்ப்ரஹீணே ச வித்தே
தூலாயாபி த்ரிபுரஹர மாம் மன்யதே நைவ பார்யா ||

பரமசிவனே! என் மனைவியை ஆராதிக்க என் உயிரையும் மதிக்கவில்லை. தேடிய பொருள் செலவாவதையும் கருதவில்லை. அப்படி என்னால் ஆராதிக்கப்பட்ட மனைவி, யான் கிழவனான போது பணமும் செலவானபின் என்னை ஒரு பஞ்சாகக்கூட மதிக்கவில்லையே! உன்னை ஆராதித்திருந்தால்?

4. कृत्वा पापान्यपि खलु मया पोषिताः शैशवे ये
निद्राहारा वपि विजहता शिक्षिता ये कलासु ।
प्रादुर्भूताः स्वयमिव हिते प्राक्तनादृष्ट लब्ध
प्रज्ञोन्मेषा इव च तनयाः नस्मरन्त्यात्मनोऽपि ॥

க்ருத்வா பாபான்யபி கலு மயா போஷிதா: சைசவே யே
நித்ராஹாரௌ அபி விஜஹதா, சிக்ஷிதா யே கலாஸு
ப்ராதுர் பூதா: ஸ்வயமிவ ஹிதே ப்ராக்தநா த்ருஷ்ட லப்த
ப்ரக்ஞோன் மேஷா இவச, தநயா: ந ஸ்மரந்த்யாத்மநோபி

பலவகைப் பாபங்களைச் செய்து இளமையில் எவர்களை ரக்ஷித்தேனோ தூக்கத்தையும் உணவையும் விட்டுவிட்டு எவர்களுக்குக் கல்வி புகட்டினேனோ அந்த புத்ரர்கள் தானே தோன்றியதாகவும் முற்பிறவியின் அதிருஷ்டத்தினால் தங்களுக்குக் கல்வி சாமர்த்தியம் வந்ததாகவும் நினைக்கிறார்கள். தங்களையே மறந்துவிடுகிறார்கள். என்னை எங்கே நினைப்பர்?

---

**சிவ பக்தருக்கு மறுபிறவி கிடையாது.**

# ஹாலாஸ்ய மஹிமை

## மதுரைமா நகரம்.

**வட**மதுரையில் விஷ்ணு லீலை. தென்மதுரையில் சிவ லீலை. இது அநாதியான க்ஷேத்ரம். புராண ப்ரஸித்தமானது. ராமேஸ்வரம் செல்பவரிங்கு தர்ஸநம் செய்யாமல் போவதில்லை. சிவநகரம், கதம்பவனம், த்வாதசாந்தஸ்தலம், பூலோக சிவலோகம் முதலிய எண்ணிறந்த பெயர்கள் உண்டு. ஸ்வாமி சுந்தரேசர். அம்பிகை மீனுக்ஷி. கதம்ப மரம் ஸ்தல வ்ருக்ஷம். ஸ்வர்ணபத்மிநீ, வேதவதி, ஸப்த ஸமுத்ரம் இவை தீர்த்தங்கள். இருவர் பாடல் பெற்றது இது.

ஸ்காந்தம் சங்கர ஸம்ஹிதையில் இந்த ஸ்தல மஹிமை வர்ணிக்கப்படுகிறது. பகவான் ஸோமசுந்தரர் என்ற பெயருடன் 64லீலைகளைச் செய்தார். இதைப் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடர் புராணமாக அமைத்தார். பார்வதி மீனுக்ஷியாக அவதரித்து அரசு புரிந்தாள். ஒப்பற்ற சிவ பக்தர் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் மந்திரியாக இருந்து 64 லீலைகளையும் உத்ஸவமாக ஏற்படுத்தினுர்.

மிகமிகப் பெரிய ஆலயமிது. 9 கோபுரங்கள் உள்ளது. மீனுக்ஷிக்கும் ஸுந்தரேசருக்கும் தனித்தனி ஆலயமுள்ளது. உலகம் வியக்கும்படி ஆச்சர்யகரமான மதில் தூண்கள் அமைந்தது. சுமார் 500 ஆண்டுகளுக்கு முன் விச்வநாத நாயகரால் கோடி ரூபாய்க்குமேல் செலவு செய்து கட்டப்பட்டது. எண்ணிறந்த மண்டபங்கள். கோவிலுக்கு எதிரில், அமைக்கப்பட்ட மண்டபம் புது மண்டபம் அல்லது வஸந்த மண்டபமாம்.

இதைக் கட்டிமுடிக்க 120 ஆண்டுகளாயின. மீனுக்ஷியின் ராஜ்யமானதால் அந்த ஆலயத்திற்கு அபரிமிதமான சொத்துக்கள், நகைகள், ஸ்வர்ண, வெள்ளி வாஹனங்கள் இருக்கின்றன. ஓராண்டிற்கு லக்ஷம் ரூபாய்க்கு மேல் வருமானமுண்டு. ஒவ்வொருமாதமும் உத்ஸவம் நடந்த வண்ணமே இருக்கும்.

---

ஸை ஆநந்தம் மோதம் ப்ரமோத முண்டு.

ஒரு வெள்ளைக்கார அதிகாரி ஒரு கட்டிடத்திலமர்ந்து வேலை செய்தபோது தேவி மீனாக்ஷி சிறுபெண்ணாகவந்து "விரைவில் வெளியில் வா" என்றழைக்க அங்ஙனமே அவன் வந்தவுடன் கட்டிடம் விழ்ந்தது. அந்தப் பெண் மீனாக்ஷியே என் உயிரைக்காத்தாள் என அவன் மீனாக்ஷிக்கு சொத்தளித்தான். தற்கால யந்த்ர சாதனங்கள் இல்லாதபோதே மேனாட்டவரும் வியக்கும்படி கோயில் கட்டப் பட்டுள்ளது.

ப்ரத்யக்ஷ அவதாரமாக இருந்தும் விவாகமான பின் மீனாக்ஷி சுந்தரேசர் தனியாக ஒரு சிவாலயம் அமைத்து பூஜித்தனர். அந்த ஆலயம் ஏகாந்தமாக இருக்கிறது. பற்பல விஷ்ணு ஆலயங்களும் எண்ணிறந்த சத்ரங்களும் அங்கு இருக்கின்றன. சத்ரங்களில் பெரும்பாலானவை அரசாங்கத்தினரால் வாடகைக்கு விடப்படுகின்றன.

பற்பல வேதசாஸ்த்ர பாடசாலைகளிருந்தன. ராமேச்வரம் தேவஸ்தான சாஸ்த்ர பாடசாலை உருமாறி உயிருடனிருக்கிறது. தமிழுக்கு இலக்கணமெழுதிய அகஸ்த்யர் இங்கு அதை வளர்த்தார். புலவர்களுக்குத் தனிச்சிறப்பான சங்கமிருந்தது. பகவானே தலைவராக சங்கப் புலவரிடையே இருந்தார். இடைச்சங்கம் கடைச்சங்கம் சங்கநூல் தோன்றிய இடமது. தமிழ்ச்சங்கவீதி என்பது அடையாளமாக இருக்கின்றது. சங்கப் பலகை எத்தனை வித்வான்கள் வந்தாலும் இடமளிக்கும்.

தமிழுக்கு-மு- சொந்தமானது. எங்களுக்கே உரியது தமிழ் எனக் கூறும் இக்காலத்தவர்-வாளைப்பளம் என்று கூறுவதுதான் விந்தை. திருமலைநாயகன் கட்டிய ஹால் உலக அதிசயங்களில் ஒன்ருக கருதப் படுகிறது. எவ்வளவோ யந்த்ரம் விக்ஞானம் வளர்ந்த இக்காலத்தில் அத்தகைய கட்டிடம் ஒன்று எழும்பவில்லை. ஆங்குள்ள ஒரு தூணுக்குப் பூர்ணமாக சுண்ணும்பு அடிக்க முடியவில்லை.

பெரிய மில்களும் காலேஜ்களும் கட்டிடங்களும் நிறைந்த ஊர். பெரிய அகில இந்திய க்ஷேத்ரம். வியாபார ஸ்தலம். பல லக்ஷம் ஜனங்கள் உள்ளது. ஆதலால் அல்லும்பகலும் அறுபது நாழியும் ஒரே கூட்டம். 1000அடி

---

**5 முறைக்குக் குறையாமல் குட்டிக்கொள்.**

கிளம் உள்ள தெப்பக்குளம் ஊருக்கு 2 மைல் தூரத்திலிருக்கிறது. அதனிடையில் ஏழுமாடியுள்ள நீராழி மண்டபமிருக்கிறது. 1 அணா கொடுத்து போட்டில் சென்று அம்மண்டபத்தில் ஏறிப்பார்த்தால் மதுரை சிறப்பு விளங்கும்.

12 மைல் தூரத்திலுள்ள அழகர் கோவிலிலிருந்து ஸ்ரீ மஹாவிஷ்ணு வைகையாற்றில் தங்கி தசாவதார காக்ஷி தரும் விழாவும் கூட்டமும் வேறெங்கும் காண்பது அரிது. சுமார் 10 மைல் தூரத்தில் திருப்பரங்குன்றம் என்ற சுப்ரமண்ய க்ஷேத்ரமிருக்கின்றது. அது தெய்வயானையை மணந்த இடம்.

கதம்பவனத்திடையே பகவான் லிங்கமாக தோன்றினார். தேவர்களெவரும் வந்து பூஜித்தனர். பகவான் சந்த்ரனிடமிருந்து மதுரமான அமிருதத்தை அங்கு அளித்தார். அது முதல் மதுரம் என்ற பெயருண்டானது. ஸ்காந்தத்திலுள்ள 71 அத்யாயங்களும் 64 லீலைகளும் கொண்ட இச்சரிதம் 50 ஆண்டுகளுக்கு முன் ஶாஸ்த்ர ஸஞ்ஜீவினி என்ற சென்னை க்ரந்தாக்ஷர அச்சகத்தில் அச்சிடப்பட்டது. ஶிவ லீலாவர்ணம் என்ற பெயருடன் ஸ்ரீ நீலகண்டதீக்ஷிதர் எழுதியது ஸ்ரீரங்கம் வாணிவிலாஸ் அச்சகத்தில் அச்சிடப்பட்டது.

இவைகளைத் தழுவி இவ்வாண்டிற்குள் 64 லீலைகளையும் முடிக்க உத்தேசம். ஸ்ரீ மீனாக்ஷீ சுந்தரேசர் அருள் புரிவாராக.

---



---

***21 முறை குட்டிக்கொள்வது இஷ்டத்தைத் தரும்.***



# ஐப்பசிமீ கோசாரப் பலன்.

ஜோதிஷபானு, E. S. K. ஸ்வாமி,
பாரத்க்ரஹ ஸஞ்சார ஆசிரியர்.

## அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய

**மேஷராசி**

இம்மாதம் சனி அஷ்டமத்திலும் அங்காரகன் குடும்பத்திலிருந்து சனி பார்வையும் பெற்றிருக்கிறர். இதனால் குடும்ப நிர்வாகத்தில் பணவசதி குறைவும், சிலருடன் விரோதப்படநேரும். சில்லரைக்கடன்களால் நச்சரிப்பு உண்டாகும். வைத்திய வகையில் செலவுகள் உண்டாகும். உத்தியோகத்தில் நிம்மதியில்லாமையும், வியாபாரத்தில் சர்க்கார் கண்டிப்பால் நிர்ப்பந்தங்கள் அதிகமாவதும் உண்டாகும். இதற்காக பிரதி செவ்வாய்க்கிழமையிலும் சுப்பிரமணிய ஸ்வாமிக்கு அர்ச்சனையும், சனி ப்ரீதிக்காக பிரதி சனிக்கிழமையிலும் நவக்கிரகப் ப்ரதக்ஷணமும் செய்து வருவது நலமாம்.

## கிருத் 2-ம்பாதம் முதல் ரோகணி, மிருகசீரிஷம் 2-ம்பாதம்முடிய

**ரிஷபராசி**

சனி ஏழிலும், அங்காரகன் ராசியிலும் இருந்து பரஸ்பர பார்வை பெற்றதால் செய்காரியங்களில் சோர்வுண்டாகும். எதுவும் தடைபட்டுக்கூடும். சிலர் கடன்படும்படியாகும், குடும்பத்தில் ஒற்றுமை இராது. புதிய ஏற்பாடுகள் தடைப்பட்டு வரும். வெளியூர் போய் வர நேரும். சிலரை நம்பி ஏமாறும்படி யாகும். சில பொருள் வாங்க நேரும். பந்துவகையில் கிலேசமும் ஏற்படுவதாகும். இதற்காக சனிவாரம் எள்கலந்த அன்னத்தை சிறு பிள்ளைகளுக்கு கொடுப்பதால் நன்மையாம்.

## மிருகசீரிஷம் 3ம்பாதம்முதல் திருவா. புனர்வசு 3-ம்பாதம் முடிய

**மிதுனராசி**

தொழில் இல்லாதவர்களுக்கு வேலை கிடைக்கும். பெரிய மனுஷ்யர்கள் ஆதரவு ஏற்படும். குடும்ப சௌக்ய முண்டாகும். சுபகாரிய முயற்சிகள் கைகூடும். பழைய வரவுகளில் திருப்தி ஏற்படும். சிலபொருள் களவுபோதல் அல்லது கைசோர்ந்து போதல் இப்படி ஏற்படும். உத்தியோகத்தில் சிலருக்கு அனுகூல மாறுதல் ஏற்படும். மேலதிகாரியின் ஆதரவு உண்டாகும். புதன் கிழமையில் விஷ்ணு தரிசனம் செய்வது நலம்.

## புனர்வஸு 4-ம் பாதம் முதல் புஷ்யம் ஆயில்யம் முடிய

**கடகராசி**

நிம்மதியற்ற வகையில் உத்தியோகம் ஏற்பட்டுவரும். தொழிலாளிகளுக்கு உழைப்புக்கேற்ற வருமானம் கிடைக்காது. சிலர் புதிய மாற்றத்தை விரும்புவர். வியாபாரத்தில் சமலாபம் ஏற்பட்டுவரும். குடும்பத்தில் ஆரோக்ய ஸம்பந்தமாய் சிறிது கவலை ஏற்பட்டு நீங்கும். கொடுத்தல் வகையில் சில நச்சரிப்பு ஏற்பட்டு விலகும். சுபவகையிலும் புண்ணியவகையிலும் குடும்பத்தில் செலவுகள் ஏற்படும். சிலருக்கு இருப்பிடம் மாறுதல் அல்லது வெளியூர் போய்வரும்படி ஏற்படும். பந்துக்களில் சிலர் விரோதம் ஏற்படுவதாகும். இந்த ராசிக்காரர்கள் திங்கள்கிழமைதோறும் துர்க்கா ஜபம் செய்வது நலமாம்.

---

**அது சிரஸிலுள்ள அமிருத கலசத்தை அசைக்கும்.**

## மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய

**சிம்மராசி**

பழைய நிலைமையில் சிறிது அனுகூலமாற்றம் ஏற்படும். ஆயினும் பண வரத்து ஏற்படாது. பிறர் சகாயம் ஏற்பட்டுவரும். உத்தியோகத்தில் மேலதிகாரியின் ஆதரவு உண்டாகும். சிநேகிதர் மேலோர் இவர்களுடைய ஆதரவு ஏற்படும். சிலபொருள் வாங்கும்படியாகும். புதிய முயற்சிகள் தடைப்பட்டுவரும். எழுத்து வேலைகளில் சிரமம் அதிகமாகும். பிறர் காரியங்களில் தலையிட நேருவதால் வருத்தம் உண்டாகும். சிலரை நம்பி ஏமாறும்படியாகும். இந்த ராசிக்காரர்கள் ஆதித்யஹ்ருதயம் ஞாயிற்றுக்கிழமையில் பாராயணம் செய்ய திசைகள் விலகி சௌகர்யம் ஏற்படும்.

## உத்திரம் 2-ம் பாதம் முதல் ஹஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய

**கன்னியாராசி**

ஆரோக்ய சம்பந்தமாய் செலவுகள் ஏற்படும். சிலருக்கு தன் சொல்லே தனக்கு விரோதமாகும். தெய்வகாரியங்களில் நாட்டமும், செலவும் ஏற்படும். பெரியமனுஷர்கள் நேசமுண்டாகும். பொறுப்பான வேலைகள் ஏற்பதில் சிரமம் அதிகமாகும். உத்தியோகத்தில் பிறர் சகாயத்தின்பேரில் அனுகூலமாற்றம் ஏற்படும். குடும்பத்தில் மனைவி புத்திராதிகள் சௌக்கியமும், புண்ணிய வகையில் செலவுகளும் உண்டாகும். புதிய முயற்சிகள் கைகூடிவரும். ராஜாங்கமூலமாய் எதிர்பார்த்த காரியங்களில் நன்மையும் ஏற்படுவதாகும். புதன்கிழமைதோறும் விஷ்ணு ஸஹஸ்ரநாம ஜபம் செய்துவருவது நன்மையாம்.

## சித்திரை 3ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய

**துலாராசி**

அலைச்சல் காரியங்களில் ஈடுபடும்படி யாகும். எந்த பிரயத்தனங்களும் தடைப்பட்டு வருவதால் நிம்மதிக் குறைவு ஏற்படும். வியாபார நடப்பில் அதிக லாபம் ஏற்படாது. சிலர் கூட்டு வியாபாரம் செய்ய முயற்சிப்பர். சிலருக்கு ஆரோக்யக் குறைவு ஏற்படுவதுடன் சரீரத்தில் சிறிது காயமும் ஏற்பட மார்க்கமுண்டு. சில பொருள் விற்கும்படி யாகும். சிலரை நம்பி ஏமாற்ற முண்டாகும். சிலருக்கு கொடுப்பல் வகையில் நிர்ப்பந்தம் ஏற்பட்டு விலகும். குடும்ப செலவுகள் அதிகமாய் வரும். சிலருக்குக் கடன்வாங்கி சிலபொருள் வாங்கும்படி யாகும். அன்னியர் உதவியை எதிர்பார்ப்பர். இந்த ராசிக்காரர்கள் வெள்ளிக்கிழமையில் ஸ்ரீலலிதாஷ்டோத்ரம் செய்துவருவது நன்மையாம்.

## விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய

**விருச்சிகராசி**

செய்தொழிலில் திருப்தியில்லாமையும், வீண் சிந்தனைகளும் உண்டாகும். சிலருடன் விவாதப்பட நேரிடும். குடும்ப நடப்பில் அதிக செலவும், சுகக் குறைவும் ஏற்பட்டுவரும். பந்து சிநேகிதர்கள் இவர்களால் மறைமுகமான தூஷணை ஏற்படும். சிலருக்கு சில பொருள் விற்பனையாகும். கொடுப்பல் வகையிலும் சில நிர்ப்பந்தம் உண்டாகும். பிரயாணங்கள் அதிகமாவதோடு செய்காரியங்களில் சோர்வு உண்டாகும். மனதிற்கு நிம்மதியிராது. இந்த ராசிக்காரர்கள் பிரதி செவ்வாய்க்கிழமையிலும் சுப்பிரமணிய மந்த்ர ஜபம் செய்வது அவசியமாகும்.

---

**அமிருதம் சித்திருக்க ஆனந்தமுண்டாகும்.**

## மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய

**தனுர்ராசி**

செய் காரியங்களில் அனுகூலமும், முன்னேற்றத்திற்கான ஏற்பாடுகளு உண்டாகும். சிலர் வியாபாரத்தில் கூட்டுசேர்த்து நடத்துவர். மேலதிகாரியின் ஆதரவும், அனுகூலமாற்றமும் உத்தியோகத்தில் உண்டாகும். வெளியூர் போய்வருதல் அல்லது இருப்பிடம் மாறும்படியாதல் இப்படியாக சிலருக்கு ஏற்படும். குடும்ப நடப்பில் சௌகரியமும், சுபகாரியங்களில் செலவுகளும் உண்டாகும். செல்வாக்குள்ள நபர்களின் சந்திப்பு ஏற்படும். வெளியூரிலிருந்து நல்லசேதி கேள்விப்பட நேரும். இந்த ராசிக்காரர்கள் ஈசுவரனுக்கு ஸஹஸ்ரநாமம் செய்வித்து, தானம் கொடுத்தல் விசேஷ நன்மையாம். தனம் சேரும்.

## உத்திராடம் 2-ம் பாதம் முதல் திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய

**மகரராசி**

பிறர் சகாயத்தின் பேரில் புதிய முயற்சிகள் கைகூடும். ஆரோக்ய சுகம் சிறிது பாதித்து குணமாகும். வேறு வேலைக்கு மாற சிலருக்கு யோகமுண்டாகும். குடும்பத்தில் சுகக் குறைவும், பிற ஜன ஆதரவும் ஏற்பட்டுவரும். சிலருடன் விரோதப்பட நேரும். பணவசதி குறைந்து சிலர் உதவியை எதிர்பார்க்கும்படியாகும். செய் தொழிலில் சுறுசுப்பு குறைந்து புத்திமந்தம் ஏற்படும். பந்துக்களால் சுகக்குறைவு ஏற்பட்டுவருவதாகும். இந்த ராசிக்காரர்கள் சனிக்கிழமைதோறும் நவக்கிரஹப் பிரதக்ஷிணம் செய்வது நலமாம்.

## அவிட்டம் 3-ம் பாதம் முதல் சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய

**கும்பராசி**

பழைய விரோதம் நீங்கும். வெளியூர் போய்வரும்படியாகும். சிலபொருள் வாங்கநேரும். தெய்வ காரியங்கள் நாட்டமும், செலவும் ஏற்படும். குடும்பத்தில் சுகக்குறைவும், அதிக செலவும் ஏற்பட்டுவரும். பெரியமனுஷ்யர்கள் நேசமும், முக்கியஸ்தர்களின் சந்திப்பும் உண்டாகும். பிரயத்தனங்கள் கூடிவரும். பந்துக்களால் சுகக்குறைவு ஏற்பட்டு வருவதாகும். சனிக்கிழமை ருத்ர ஜபம் செய்ய நலமாம்.

## பூரட்டாதி 4-ம்பாதம் முதல் உத்திரட்டாதி, ரேவதி முடிய

**மீனராசி**

வரவேண்டிய பணம் தடைபடுவதால் குடும்ப நிர்வாகத்தில் சிரமம் ஏற்படும். வியாபார நடப்பில் மந்தம் ஏற்படும். பிறர் உதவியை எதிர்பார்க்கும்படியாகும். சிலருக்கு விவாத விஷயங்களில் தலையிடும்படியாகும். குடும்பத்தில் சிறிது வயித்திய வகையில் செலவுகள் ஏற்படும். வெளியூர் சேதிமூலம் கிலேசம் ஏற்படும். உத்தியோகத்தில் திருப்தி குறையும். முன்னேற்றத்திற்குத் தடையும் ஏற்பட்டுவருவதாகும். பிரதி வியாழக்கிழமையிலும் தக்ஷிணாமூர்த்தி அஷ்டோத்திர பாராயணம் செய்வது நன்மையாம்.

---

**த்வாப்யாம் கர்ணம் தோபகர்ணமாயிற்று.**

# ஆயுர்வேதம். (1)

டாக்டர், V. K. வெங்கிடசாமி, M. B., B. S., F. I. M.

வைதிக தர்ம அபிவிருத்தியில் அபிலாஷை கொண்ட அனைவரும் ஆயுர்வேதத்தைக் கற்றறிய வேண்டியது மிக அவஶ்யம். இது பதினான்கு வித்யைகளில் ரிக்வேதத்திற்கு உபவேதமாக உள்ளது. ப்ரஞ்ஞானம் ப்ரம்மம் என்ற மகா வாக்யத்தைக் கொண்ட ரிக்வேதமானது அத்தகைய ப்ரம்மத்தை அடைய ஸாதகமாயுள்ள நீண்ட ஆயுளைப்பெறும் வழிகளை விவரிக்கும் ஆயுர்வேதத்தை உபவேதமாகக் கொண்டது மிகப் பொருத்தமானது.

வாக்படர் என்ற பிரபல பிராசீன வைத்ய ஆசிரியர் ஆத்ரேயர் முதலிய மகரிஷிகள் பின்வருமாறு கூறுவதாக எழுதியுள்ளார். " தர்மத்தையும் அர்த்தத்தையும் (காமம் மோக்ஷம் என இருவகையான) சுகங்களையும் சாதிக்கவல்ல தீர்காயுளை விரும்புபவன் ஆயுர்வேத உபதேசத்தில் அதிக ஆதரவு உள்ளவனாய் இருக்கவேண்டும்

ஆயுர்வேத ஆசார்ய பரம்பரையில் முதலில் பிரும்மாவும் பிறகு தக்ஷப்ரஜாபதியும் அஶ்வினீ தேவதைகளும் இந்திரனும் ஆத்ரேயர் முதலிய முனிவர்களும் அக்னிவேசர் போன்ற மகரிஷிகளும் வருகிறார்கள். இவர்களைப் பின்பற்றி தற்போது ஆயுர்வேதத்திற்கு சரக ஸம்ஹிதையும் ஸுஶ்ருத ஸம்ஹிதையும் மூலக்ரந்தங்களாக உள்ளன. வாக்படர் என்ற மகான் இவைகளினின்று (தேகத்திற்கு ஹ்ருதயம்போன்ற) ஸாராம்சமாய் 'அஷ்டாங்க ஹ்ருதயம்' என்ற நூலை இயற்றியுள்ளார். சாதாரணமாய் ஆயுர்வேத வைத்யர்களுக்கு இதுதான் கைபுஸ்தகமாக இக்காலத்தில் வழங்குகிறது. முக்காலத்து முனிவர்கள் வைத்யத்தில் முக்யமான சிகித்ஸையை எட்டு அங்கங்களாகப் பிரித்திருப்பதால் இக்கிரந்தம் அஷ்டாங்க ஹ்ருதயம் எனப் பெயர் பெற்றது.

அவ்வித எட்டு அங்கங்களாவன.— *1 காயசிகித்ஸை* - தேகம் முழுவதும் பற்றியுள்ள ஜ்வரம் காமலை முதலிய

வியாதிகளைப்பற்றியது. 2 **பால சிகித்ஸை** — குழந்தை வைத்யம். 3. **கிரஹ சிகித்ஸை**—கெட்ட கிரஹங்களால் உண்டாகும் ரோகங்கள். 4. **ஊர்த்தவாங்கசிகித்ஸை** - தேகத்திற்கு மேல் பாகத்தில் உள்ள கண் காது முதலிய அங்கங்களைப் பற்றிய வியாதிகள் 5. **சல்யசிகித்ஸை** - சஸ்த்திரங்களால் தீரும் ரோகங்கள். 6. **தம்ஷ்ட்ர சிகித்ஸை** - விஷவைத்யம். 7. **ஜராசிகித்ஸை**-ரஸாயநங்களால் தீரும் முதுமைப்பருவம் 8. **வ்ருஷசிகித்ஸை**-வாஜீகரணம் அல்லது வ்ருஷ்யம் என்ற சுக்ல (சோணித) விருத்தி முறைகள்.

ஆயுர்வேதத்தை சரியாய் அறிந்துகொள்ள, அதை மூவகையாகப் பிரிக்கலாம். I. தேகதத்வங்களும் அவற்றின் மாறுபாடுகளான ரோகங்களும். II. சிகித்ஸா பதார்த்தங்களும் முறைகளும். III. ஆரோக்ய வழியும் நோய் தீரும் விதமும். மேற்கூறிய பிரிவுகளைப்பற்றி சுருக்கமாக சில விவரங்களை முதலில் எழுதி, பிறகு ஒவ்வொரு சஞ்சிகையிலும் தொடர்ந்து தேகதத்வம், வியாதிகளின் தன்மை, சிகித்ஸா முறைகள் என்பவைகளை ஒரு பாகமாகவும், பதார்த்த குணங்கள், ஔஷதங்களைத் தயாரித்தில், அவற்றின் பிரயோகங்கள் ஆகிய வைகளை மற்றொரு பாகமாகவும் ஆராய்வோம்.

உலகம் யாவும் பிருத்வி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்ற பஞ்ச பூதங்களானவை. இவற்றின் ஒருவித முறையான சேர்க்கையாலேயே பிரபஞ்சமுண்டாயிற்று.

தோஷங்கள், தாதுக்கள், மலங்கள் என்றவைகள் எப்பொழுதும் தேகத்திற்கு மூலாதாரமாயுள்ளன. சரீரத்தில் இவைகள் எங்கும் வியாபித்து இருக்கின்றன.

வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்றும் **த்ரிதோஷங்கள்**. இவை கோளாறடைந்தால் தேகத்தில் வியாதிகளும், ஸமானமாயிருந்தால் ஆரோக்யமும் உண்டாகும்.

ரஸம், ரக்தம், மாம்ஸம், மேதஸ், அஸ்தி, மஜ்ஜா சுக்ரம் என்ற எழும் '**ஸப்த தாதுக்கள்**'.

(குதத்தினின்று வெளிவரும்) மலமும் மூத்திரமும், (கோழை) ஆகார மலங்கள் கபம் (திரவமான) பித்தம்

---

**இடை பிங்கலை நாடிகளைச் சுத்திசெய்யும்.**

காது மூக்குகளிலுள்ள கழிவுப்பொருள்கள், வியர்வை, நகம், மயிர், கண், சர்மம், குதமலம் இவற்றிலுள்ள ஸ்நேஹ பாகங்கள் முறையே ஸப்ததாதுக்களுக்கு மலங்கள். ஓஜஸ் என்பது எல்லாதாதுக்களுக்கும் மலமாகக் கருதப்படுகிறது.

சுக்ல-சோணித சேர்க்கையால் பத்துமாத கர்ப்பவாஸத்தில் நமது தேகம் உண்டாகி வளர்ந்து வெளிவருகிறது. இந்த பிரத்யக்ஷ சரீரம், தலை, உடல், இருகைகள், இருகால்கள் என ஆறு அங்கங்களையும் அவற்றில் ஹ்ருதயம், யக்ருத், பிலீகம், கண், காது, மூக்கு ஸிரை, தமனி, ஸ்நாயு, பேசி, கலா, ஆசயம், என்ற பற்பல உப அங்கங்களையும் கொண்டுள்ளது.

ஆகாரம் கர்மேந்த்ரிய-ஞானேந்த்ரிய அந்தக்கரண விருத்திகள் காலம் முதலிய பௌதிகசக்திகள் தெய்வம் ஆகிய இவைகளின் மாறுதல்களால் தேகமோ மனதோ இரண்டுமோ தாக்கப்பட்டு தோஷங்களாலான நிஜவியாதிகளும் புறக்காரணங்களாலான ஆகந்துக வியாதிகளும் உண்டாகின்றன.

ரோகிகளை தர்ஶனம் ஸ்பர்ஶனம் முதலிய ஞானேந்திரியங்களாலும் பிரஶ்னத்தாலும் பரீக்ஷிக்கவேண்டும். இதனல் ரோகத்தின் **நிதானத்தையும்** (காரணங்கள்) **பூர்வரூபத்தையும்** (முற்குறிகள்) **ரூபத்தையும்** (வெளிவரும் குறிகள்) தெரிந்துகொண்டு சிகித்ஸைவழிகளால் **உபசயம்** செய்து **ஸம்ப்ராப்தி** என்றரோகத்தின் ஸ்வரூபத்தை நிர்ணயிக்கவேண்டும்.

ஔஷத வஸ்துக்களைப் பற்றி நாம்அறியவேண்டியது அவற்றின் திரவ்ய-ரஸ-வீர்ய-விபாக பிரபாவங்கள். **திரவ்யங்கள்** பஞ்சபூதங்களாலானவை. இவற்றினின்று, மதுரம் (தித்திப்பு) அம்லம் (புளிப்பு) லவணம் (உப்பு) திக்தம் (கசப்பு) கடு (காரம்) கஷாயம் (துவர்ப்பு) என்ற ஷட் (ஆறு) **ரஸங்கள்** உண்டாகின்றன. வஸ்துவின் வலிவுள்ள குணத்திற்கு **வீர்யம்** எனப்படும். அது உஷ்ணம் சீதம் என இருவகையானது. **ஜீரண**மாகும்போது ஷட்ரஸங்களும் மதுரம், அம்லம், கடு என்று மூவிதமாக

பரிணாமமடைகின்றன. இதுவே விபாக மெனப்படும்.' ஒரு வஸ்து அதன் திரவ்ய–ரஸ–வீர்ய–விபாகங்களினால் நிர்ணயிக்கப்பட்ட காரியத்தை மீறி வேறு வேலையைச் செய்தால் அதற்குப் பிரபாவம் எனப்படும்.

முக்யமாய் மருந்துகள் இரத்தத்தில் சென்று வேலை செய்கின்றன. இதைத்தவிர ஸ்நேஹம் (தைலம் தடவல்) ஸ்வேதம் (வியர்வை உண்டு பண்ணல்) வமனம் (வாந்தி செய்வித்தல்) விரேசனம் (பேதிக்குக் கொடுத்தல்) வஸ்தி (குதம், மூத்திரவழி, யோனி மூலம் திரவங்களைச் செலுத்துதல்) நஸ்யம் (மூக்கில் விடல்) தூமபானம் (புகை ஏற்றல்) கண்டூஷம் (கொப்பளித்தல்) கண்ணில் அஞ்ஜனம் (மை) முதலியவைகளைப்போடல், யந்திர சஸ்திர உபயோகம், க்ஷாராக்னி கர்மம் என்ற சிகித்ஸா முறைகள் பல உள்ளன.

நோயணுகாமல் ஆரோக்யமாய் வாழ தினசரியை, ருதுசரியை என்ற பிரதிதினமும் வருஷத்தில் வரும் வெவ்வேறு ருதுக்களிலும் அநுசரிக்கவேண்டிய விதிகள் இருக்கின்றன.

கடைசியாக வியாதிகள் தோன்றிய பிறகு அது அதற்கேற்ற சிகித்ஸா முறைகளைக்கொண்டு அறவே அவைகளை நிவர்த்தி செய்யவேண்டும்.

குறிப்பு:– ஆயுர்வேதத்திற்கும் நவீன வைத்யத்திற்கும், சற்றும் முரண்பாடே கிடையாது. ஆராயும் வேளையிற் ஆயுர் வேதத்தின் அடிப்படை தத்துவங்களே நவீன வைத்ய முறையிலும் கையாண்டு வரப்படுகின்றன. ஆனால் இதை ஒத்துக்கொள்ளும் டாக்டர்கள் மிகச்சிலரே எனினும் வைதிக தர்ம வர்த்தனீ வாசகர்கள் வேதத்தின் அநாதித்வத்தை அறிந்தவர்களாதலால் ஸநாதனமான ஆயுர்வேதத்தை சரியாகக்கற்று, கேட்டு, சிந்தித்து, தெளிந்து அவைபடி நிற்றல் வேண்டும். எவ்வித புது வாஹனங்கள் வரினும் காலால் நடப்பதை கைவிடமுடியுமா? ஆயுர்வேதத்தை அநுஷ்டிப்பதில்லை என்பது, ஒருவன் நவீன விஞ்ஞான முறைகள் வந்த பிறகு தான் நடப்பதே இல்லை போன்றதேயாம்.

---

**மற்றதை வை. த. வர்த்தநீ புராணப்பகுதியில் காணலாம்.**

# (பார்க்கவ) கணேச புராண அவதாரிகை

சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம் |
ப்ரஸன்ன வதநம் த்யாயேத் ஸர்வ விக்நோப சாந்தயே ||

ப்ருகு முனிவர் ஸோமகாந்தனுக்குச் சொன்னதால் பார்க்கவ புராணம் எனப்படும். கணேசர், விநாயகர் என்ற பல பெயர்கொண்ட விக்நராஜனது அவதாரம் லீலை முதலியவைகளைக் கூறுவதால் கணேச அல்லது விநாயக புராணமெனப்படும். இது 18 உபபுராணங்களைச்சார்ந்தது. ஸ்ரீ வேதவ்யாஸரிடம் கேட்டு ப்ருகு முனிவரால் எழுதப்பட்டது.

விநாயகரது பெருமையைக் கூறாத புராணமே இல்லை யெனலாம். ஆயினும் கணேச புராணம் முத்கல புராணம் இரண்டும் விநாயகர் மஹிமையை விஸ்தாரமாகக் கூறுகின்றன.

உபாஸனா கண்டத்தில் பிரும்மா விஷ்ணு சிவன் முதலிய பலர், விநாயகரை உபாஸித்து நன்மைபெற்றது விரிவாகக் கூறப்படுகிறது. லீலாகண்டத்தில் வக்ரதுண்டர், சிந்தாமணி, கஜாநநர், விக்நவிநாயகர், மயூரேசர், பாலசந்த்ரர், தூம்ரகேது, கணேசர், கணபதி, மஹோத்கடர், டுண்டு, வல்லபர் என்ற பன்னிரண்டு அவதாரங்களும் லீலைகளும் விஸ்தாரமாகக் கூறப்படுகின்றன. இதைத்தவிர எண்ணிறந்த பெயர்களுடன் எண்ணிறந்த கணபதிகள் ஆங்காங்கு காணப்படுகின்றனர்.

ஒவ்வொரு பக்தர் ஒவ்வொரு காரணம்பற்றி விசித்ர மான பெயரிட்டு விநாயக ப்ரதிஷ்டை செய்தனர். சென்னை யில் இலைக்கட்டுப் பிள்ளையார், காட்டுப் பிள்ளையார், அடி பட்ட பிள்ளையார், என்பது போன்ற பல காணலாம். ஹேரம்பர், உச்சிஷ்ட கணபதி, பஞ்சமுக கணபதி, ஶக்தி கணபதி, லக்ஷ்மீ விநாயகர், ஹரித்ரா கணேஶர், ரிண ஹர்த்ரு கணேஶர், ஸித்தி கணேஶர் முதலியன மந்த்ர ஶாஸ்த்ரத்தில் கூறப்படுகின்றன.

சில ஆலயங்களில் வாதாபி, பால, தருண, பக்தி, வீர, ஊர்த்வ, த்விஜ, க்ஷிப்ர, ந்ருத்த, க்ஷிப்ரப்ரஸாத, கோ கர்ண, ஸ்ருஷ்டி, உத்தண்ட, த்ரிமுக, ஸிம்ம, யோக, ஸங் கடஹர, மூலாதார, ஸித்தி, புத்தி விநாயக என்பனபோல் எண்ணிறந்த விநாயகர்கள் உண்டு. ஸ்ரீரங்கம் கோயிலி லும் விநாயகரிருக்கிறார்.

அவர் ஓங்கார ரூபீ. முழுமுதற் கடவுள். 6 மதங் களில் கணபதி மதம் ஒன்று. பிள்ளையார் சுழி போட்டே எழுதுவது முன்னோர் வழக்கம். ஓம் என்ற எழுத்தின் மாறுதல் [உ] பிள்ளையார் சுழி. பாரதத்தை வியாஸர் கூற விநாயகர் எழுதினார். முதலில் எழுத்தை ஆரம்பித்த தால் அவர் நினைவாகம் பிள்ளையார் சுழி. யோக சாஸ்திரத் தில் விநாயகர் மூலாதாரமாம். நரமுகனை கணபதியின் தலை சனைஶ்சரன் வீக்ஷணத்தால் கஜமுகமாயிற்று என சிவபுராணம் கூறுகிறது. கிருஷ்ணன் கணபதியானார் என ஒரு புராணம். சிதம்பரத்தில் நரமுக கணபதி இருக்கிறார்.

ஸ்ரீ வைஷ்ணவர், ஜைனர், புத்தர் முதலியவர்களும் இவரை உபாஸித்தனர். பர்மா, ஸயாம், சம்பா, கம் போடியா, திபேத், சைனா, துருக்கிஸ்தானம், மங்கோலியா, ஜப்பான் முதலிய இடங்களிலும் விநாயக பூஜை இருந் தது. ஆங்கு இன்றும் அவர் சிலை காணப்படுகிறது. விக்நத்தை அகற்றி கார்யஸித்தியைத் தருவதால் விக்நே ஶர், ஸித்திகணபதி என்போம். அவர் சரித்தைப்படித்து அவரை உபாஸித்து ஸித்திபெறுவோமாக.

ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

உ

# ஸ்ரீ பார்க்கவ புராண மூலக்ரந்த அநுக்ரமணிகை.

---

1 ஸோமகாந்த சரிதம், 2 அரசன் வனம் கிளம்புதல். 3 புத்ரனுக்கு தர்மோபதேசம், 4 ப்ரஜைகள் வருந்தல், 5 ச்யவனராஜ ஸம்வாதம் 6. ப்ருகுவின் ஆஶ்ரமம் வருதல். 7 ஸோமகாந்தனின் பூர்வ சரிதம். 8. ஹிம்ஸிக்கும் பக்ஷிகளை விரட்டுதல், 9 ப்ருகுவின் உபதேசம், 10 வ்யாஸ ப்ரஶ்னம்.

11 மந்த்ரோபதேசம். 12 கஜானன தர்ஶனம். 13 ப்ரம்ஹ ஸ்துதி. 14 ப்ரம்ஹ சிந்தை. 15 கணேஶ பூஜா விவரணம். 16 நித்ரா ஸ்துதி. 17 கணேச மந்த்ரோபதேசம். 18 ஸித்த க்ஷேத்ரோத்பத்தி. 19 கமலா புத்ர சரிதம். 20. தக்ஷ ஸ்துதி.

21 தக்ஷனுக்கு மந்த்ரோபதேசம். 22 வல்லால விநாயக சரிதம். 23 வரும் சரிதம் கூறுதல். 24 கௌண்டின்ய சரிதம். 25 முத்கல சரிதம். 26 ராஜ பரம்பரா வர்ணனம். 27 ருக்மாங்கத சரிதம். 28 ப்ராயோபவேஶனம். 29 நாரதர் வருகை. 30 இந்த்ர அஹல்யா சரிதம்.

31 இந்த்ர ஶாபம். 32 இந்த்ரனுக்கு உபதேஶமும் கணபதி மந்த்ரமும். 33 இந்த்ர ஶாபமகலுதல். 34 சிந்தாமணி தீர்த்தம். 35 காதம்பபுர வர்ணனம். 36 க்ருத்ஸமதர் சரிதம். 37 வரதாக்யானம். 38 வரப்ரதானம். 39 த்ரிபுரன் இந்த்ரனை ஜயித்தல். 40 த்ரிபுரநகர நாசம்.

41 விநாயகர் ப்ராம்மண வேஷம் தரித்துச் செல்லல். 42 த்ரிபுர சிவயுத்தம். 43 விநாயக மூர்த்தி ஹரணம். 44 பஞ்சாஸ்ய கணபதி பூஜை. 45 விநாயகர் சிவனுக்கு வரமளித்தல். 46 கணேஶ ஸஹஸ்ரநாமம்.

**பூர்வார்த்தம் உபாஸனா கண்டம் முற்றிற்று.**

## உத்தரார்த்தம்-லீலா கண்டம்.

11 பால சரிதம். 12 ராக்ஷஸ வதம். 13–14 பால சரிதம். 15 நகர் மோக்ஷணம். 16 அரசன் திரும்புதல். 17–18 கபடி தைத்யவதம். 19 கூபகந்தர வதம். 20 மூன்று அஸுரர் வதம்.

21 ராக்ஷஸி வதம். 22 பால சரிதம். 23 சுக்ல வரப்ரஸாதம். 24 விநாயக பூஜை. 25 பக்தி ப்ரஸம்ஸை. 26 பீமராக்ஷஸன் விடுதலை. 27 பாலசரிதம். 28 பீமராக்ஷஸர்களின் பூர்வ ஜன்ம சரிதம். 29 விரோசன வதம். 30 வாமநாவதாரம்.

31–32 பால சரிதம். 33 பால ஸஞ்ஜீவனம். 34 பால சரிதம். 35 ஸமீமந்தார மஹிமை. 36 பால சரிதம். 37 ஸமீமந்தார மஹிமை. 38 பால சரிதம். 39 துராஸதன் கதை. 40–41 பால சரிதம். 42 துராஸத ஜயம். 43 டுண்டிராஜன் சரிதம். 44 பால சரிதம். 45 திவோதாஸன் கதை. 46–47 பால சரிதம். 48 கீர்த்திக்கு வரமளித்தல். 49 ஸமீமந்தார பலன். 50–51–52 கணேசலோக வர்ணனை. 53 அரசன் ஆனந்த மடைதல். 54 பால சரிதம். 55 தூநமோசனம். 56 நராந்தகன் போருக்குக் கிளம்புதல். 57 ராஜ நிக்ரஹம். 58 நராந்தக நிக்ரஹம்.

59 ராஜன் விடுதலை. 60-61 அசுரனை யடக்கி விஸ்வரூபம் காட்டுதல். 62 நகரத்தைத் தகைத்தல். 63 சுக்ர த்யாகம். 64 யுத்த வர்ணனம். 65 புத்தி ஜயம். 66 ஸித்தி பராஜயம். 67–68 அஸ்த்ர யுத்தம். 69 ப்ரஹ்ம ப்ரார்த்தனை. 70 நகர ப்ரவேஸம்.

71 விநயகர் ஆஸ்ரமத்திற்குச் செல்லுதல். 72 விநாயக சரிதத்தைக் கூறுதல். 73 ஸிந்தூரத்பத்தி. 74 வரப்ரதானம். 75–76–77 தேவர் தோல்வி. 78 தேவருக்குச் செல்வ வரம் அளித்தல். 79–80 கௌரீ மந்த்ரம்அளித்தல். 81-82-83 கணேஸ ஆவிர்பாவம். 84 பாலாஸுர வதம். 85 கணேஸ சவசம். 86 பூமியில் அமருதல். 87 கமடாஸுர வதம். 88 மஞ்சகாஸுர வதம். 89 ஸபலாஸுர வதம். 90 அவிஜேய வதம். 91 வத்ஸ ஸைலாஸுர வதம். 92 விஸ்வரூப

தர்ஶனம். 93–94 சஞ்சல வதம். 95 வ்ருகாஸுர வதம். 96–97 அதிதி கௌரீ விவாதம்.

98–99 ஶிகண்டிக்கு வரமளித்தல். 100 பகாஸுர வதம். 101 அஸுர ஸேனை யழித்தல். 102 கமலாஸுர யுத்தம். 103 கமலாஸுர வதம். 104 விஶ்வரூப தர்ஶனம். 105–106–107 தேவர்களின் பேத புத்தியைப் போக்கடித்தல். 108 சனி கர்வபரிஹாரம்.

109–110 ராக்ஷஸ வதம். 111 விசார வர்ணனம். 112–113-114 மித்ர கௌஸ்துப வதம். 115 ஸிந்துவைப் பங்கம் செய்தல். 116 ரணஶோதகம். 117 துர்கா வாக்கியம். 118–119 கல விகல வதம்.

120 to 126 பித்ரு ஸிந்து ஸம்வாதம். 127–128 ஸிந்தூரோத்பத்தி. 129 கௌரி மசக்கை வர்ணனம்.

130 கஜானன ஆவிர்பாவம். 131 கந்தர்வ தோல்வி. 132 கைலாஸம் செல்லுதல். 133 பராஶர தர்ஶனம். 134–135 க்ரௌஞ்ச ஶாப வர்ணனம். 136 ஸிந்தூரன் கிளம்புதல். 137 வரேண்யோபதேஶம்.

138–139 கணேஶ கீதா. 140 ஞான ப்ரதிபாதனம். 141 த்வைத ஸந்யாஸம். 142 யோகாவ்ருத்தி ப்ரஶம்ஸந யோகம். 143 புத்தி யோகம். 144 உபாஸனயோகம். 145 விஶ்வரூப தர்ஶனம். 146 விவேக யோகம். 147 யோகோபதேசம். 148 த்ரிவித வஸ்து. 149 முநி விஸர்ஜனம். 150 வியாஸ அனுக்ரஹம். 151 ஸோம காந்த விமான ப்ராப்தி.

152 ஹேமகண்ட தர்ஶனம். 153 ஸோமகாந்தன் தேவனுதல். 154 விநாயக வர்ணனம். 155 பலஶ்ருதி.

**கணேஶபுராண மூலக்ரந்த அனுக்ரமணிகை**

**முற்றிற்று.**

---

# ஸ்ரீ பார்க்கவ புராணம்.

## கணேச புராணம்.

நமஸ்தஸ்மை கணேசாய ப்ரம்ஹவித்யா ப்ரதாயிநே I
யஸ்ய அகஸ்த்யாயதே நாம விக்ந ஸாகர சோஷணே II



**சௌனகாதி** மஹரிஷிகள் ஸூதரை வணங்கிச் சொல்கிறார்கள். எங்கள் தவப்பயனால்தான் தங்களைத் தர்ஶிக்கநேரிட்டது. நாங்கள் தன்யர்களானோம். தாங்கள் பதினெண் புராணங்களையும் உபதேசித்தீர்கள். மேலும் சிலகதைகளைக் கேட்க ஆவலுள்ளவர்களாக இருக்கிறோம்.

*ஸூதர்:-* நன்றாகக் கேட்டீர்கள். ஸாதுக்களின் புத்தி உலகத்திற்கு உபகாரத்தையே செய்யும். எனக்கும் கதை சொல்வதில் மிகவும் ஸந்தோஷம். ஆகையால் நான் உங்களுக்கு உபபுராணங்கள் 18 ஐயும் சொல்கிறேன். அவைகள் கணேஶம் நாரதீயம் நாரஸிம்மம் நந்திபுராணம் சிவ தருமம் துருவாஸம் கபிலபுராணம் ஸௌம்யம் வாருணம் காளிகா வாசிட்டலிங்கம் ஸநத்குமாரம் ஔஶநஸ புராணம் மானவம் ஸௌரம் பராஶரீயம் மரீசி ஸாம் பேசபுராணம் என்பனவாம். இந்த கணேஶ புராணத்தை முன்னம் நான்முகன் அநேக ஆண்டுகள் தவம் செய்து சிவனிடமிருந்து நேராக உபதேசம் பெற்று தன்னை நாடிக் கேட்பவருக்கு இதை உபதேசித்து வந்தார். வியாஸர் அவரிடமிருந்து உபதேசம் பெற்றார். அவர் ப்ருகு முனிவருக்கு உபதேசித்தார். அவர் உலகத்திற்கு உபகாரமாக உபாஸனை கண்டமென்றும் லீலாகண்டமென்றும் இரண்டாகப்பிரித்து அவ்விரண்டையும் இருநூற்றைம்பது அத்யாயங்களாக்கி பன்னீராயிரம் சுலோகங்கள்கொண்ட புராணமாக்கினார். அதனால் பார்க்கவ புராணமெனப்படுகிறது. அப்புராணத்தை ஸோமகாந்தன் எனும் வேந்தனுக்கு உபதேசித்தார்.

## ஸோமகாந்த சரிதம்.

எல்லா ஐச்வர்யங்களும் பொருந்திய ஸௌராஷ்ட்ரம் என்னும் நாட்டிலே நதி, நத, தடாகம், மதில், கோபுரம் பள்ளம் ஆழமான அகழ் அழகிய உத்யானம் இவைகளாலும் இயற்கை வளத்தாலும் சூழப்பட்ட மிக அழகிய தேவநகரம் என்று ஒரு பட்டணமுண்டு. அந்நாட்டை ஸோமவம்சத்திலுதித்த ஸோமகாந்தன் என்ற அரசன் நீதியுடன் ஆண்டுவந்தான். அவனுக்கு ரூபவான் வித்யாதீரன் க்ஷேமங்கரன் ஞானகம்யன் ஸுபகலன் எனும் ஐந்து அமைச்சர்கள் இருந்தார்கள். இவர்களுடன் மன்னன் நீதி வழுவாமல் ராஜ்ய பரிபாலனம் செய்துவந்தான்.

இவ்வரசனுக்கு நற்குணமும் அழகுமுள்ள ஸுதர்மா எனும் உத்தமபத்னி இருந்தாள். இவர்களுக்கு ஹேமகண்டன் என்ற ஓர் மைந்தன் உண்டானான். அவன் ஆயிரம் யானை வலிமையுள்ளவனாகவும் தன் பகைவர்களுக்கு காலகண்டனாகவுமிருந்தான்.

ஸோமகாந்தன் இவர்களோடு இன்பமாக இல்லற வாழ்க்கை நடத்திவருங்காலத்தில் பூர்வஜன்ம பாபப்பயனால் குஷ்டமெனும் மஹாவியாதி அரசனைப் பீடித்தது. அதனின்றும் ரத்தம், சீ உண்டாகிப்பெருகிற்று. அதை யகற்ற மணிமந்த்ர ஔஷதங்களைச் சேவித்தான். நோய் சிறிதும் அகலவில்லை. அவன் அமைச்சர்களையழைத்துக் கூறினான்.

அமாத்யர்களே! இதுவரை நம்மை எதிர்த்து வந்த பகைவர்களை வென்றோம். உலகமுழுவதும் நீதி வழுவாது அரசு செலுத்தினோம். தேவர்களுக்கெல்லாம் த்ருப்தியாக அநந்த யாகங்களைச் செய்து முடித்தோம். சுற்றத்தாரையெல்லாம் சுகம் பெறச் செய்தோம்.

யாவர்க்கும் இளைப்பாறக் குளிர்ந்த சோலைகளை உண்டாக்கினோம். பெரியோரர் கூறியபடி பல அறங்களைச் செய்தும் இக்கடும் நோய் நீங்கவில்லை. என் செய்வேன்! ஆகவே ராஜ்யத்தை என் மைந்தனிடம் ஒப்படைத்துவிட்டு தபோவனம் செல்வதே மிக்கநலம். என் புத்ரன் ஹேமகண்டன் என்னிலும் சிறந்தவனாக இருக்கின்றான். அவனுக்கு உம்முடைய உத்தம மந்திராலோசனையைக் கூறுங்கள்

இவ்வுலகை நீதியுடன் ஆள நன்மார்க்கத்தைப் போதியுங்கள் யான் வனம் செல்கிறேன்.

அதைக்கேட்டுக் குடிகளும் மந்திரிகளும் மிக்க மன வருத்தம் அடைந்தனர். அவ்வரசன் துக்கத்தினலும் வியாதியின் கொடுமையாலும் சோர்வுற்று மூர்ச்சையானன். அமைச்சர்களும் மற்றவர்களும் மனம் கலங்கி அரசனுக்குச் சிகிச்சை செய்தனர். சில நிமிடம் கழிந்து மூர்ச்சையிலிருந்து விடுபட்டான். மந்திரிகள் குடிகளுடன் ஒன்றுகூடி அரசனைப் பார்த்துக் கூறினர்.

பூபால! தாங்கள் எங்களைத் தாய்தந்தைபோல் பாதுகாத்து வந்தீர். தாங்கள் வனம் சென்று வாஸஞ்செய்தால் தேவரீரை விட்டு நாங்கள் வாழ்வது தருமா? அது நியாயமா? தங்களது குமாரன் ஹேமகண்டன் தர்மம் அர்த்தம் இரண்டையும் இடரின்றித் தேடி தேசம் முழுவதும். தமது செங்கோல் செலுத்துவான். மநுநீதி தவருது சக்ரவர்த்தியாக இருந்து அரசு புரிவான். மற்றவர் துணையும் வேண்டுமா? நாங்களும் தங்களுடன் வனத்திற்கு வருகின்ருேம். தாங்கள் குமாரரை அரசுக்குரியவராக நியமிப்பீர்கள், என்று விண்ணபஞ் செய்துகொண்டனர்.

இவ்வாறு நடந்தவைகளை யெல்லாம் ஸுதர்மை கேள்வியுற்று மனங்கலங்கி விரைந்து வந்து நாதனை வணங்கிக் கூறினள்.

பிராண நாத! இதுவரை தேவரீருக்கு உண்டான இன்பதுன்பங்களை யெல்லாம் வேறுபாடின்றி ஸமமாக அனுபவித்து வந்தேன். இப்போது தேவரீர் வனத்திற்குச் செல்ல எவ்வாறு நான் தனித்திருந்து உயிர் தரிப்பேன். உத்தம மங்கையர் தன் கணவர் உயிர் பெற்றிருக்கும் வரை அவருடன் சேர்ந்து வாழ்ந்து அவர் இறக்கும் காலத்தில் தாங்களும் இறப்பர். கற்புள்ளவர் இம்மையில் இன்பத்துடன் புகழ் பெற்று மறுமையிலும் ஸ்வர்காதிபோகங்களையும் அடைவார். அங்ஙனமே நானும் தேவரீரோடு வனத்திற்கு வருவேன். ஒரு க்ஷணமேனுந் தங்களைவிட்டு தனித்திரேன் என்று சொல்லி காற்றில் அடிபட்ட இளங்கொடி போலவும் அம்புகள் தைத்து பதைக்கின்ற பெண் மான்போலவும் உள்ளங்கலங்கி உணர்விழந்து கண்களில்

நீர் தாரையாகப் பெருக துக்கத்தோடு முறையிட்டான். ஹேமகண்டன் அதைக்கேட்டு மனம்வருந்தி தானும் அரசன் எதிரில் வணங்கி நின்று என் அருமைத் தந்தையே! சந்திர சூரியர்களைப் பிரிந்த வானம்போலவும் அக்னியும் பசுவும் இல்லாத யாகம் போலவும் புருடனையும் புத்ரனையும் பிரிந்த ஸ்த்ரீபோலவும் உம்மிருவரையும் பிரிந்தபின்பு யானெவ்வாறு ஜீவித்திருப்பேன்? எப்படி அரசாள்வேன். புத்ரர் கடமை தாய் தந்தையர் இருக்கும் காலத்து அவர் களைத் தெய்வமாக பூஜித்தும் இறந்த காலத்து அவர்களுக் காக பித்ருக் கடன்களைச் செய்வதுமே. அவைகளை மறந்து அல்ப போகங்களை விரும்பி அரசாட்சியில் மூழ்கியிருப் பேனோ? யான் செல்வத்தையும் ராஜ்யத்தையும் மதித்தவ னல்ல. உம்மிருவரோடும் யானும் வனத்திற்கு வந்து பணிவிடை செய்கிறேன் என்றான்.

இவ்வாறு அமைச்சர்களும் மனைவி சுதர்மையும் புத்ரன் ஹேமகண்டனும் கூறிய சொற்களைக்கேட்ட அரசன் மனங்குளிர்ந்து குமாரனைப் பார்த்து மைந்தனே! நீ சிறு பிள்ளையல்ல. தாய் தந்தையர்களைத் தெய்வமாகப்பூசித்து அவர்கள் இறந்தபின் அளவற்ற தானங்களைச் செய்து ஜலம் பிண்டம் முதலியவைகளைத் தந்து மற்றுமுள்ள கர் மாக்களைச்செய்கின்றவனே உத்தம புத்ரன். ஆதலால் என் உத்தரவின்படி அமைச்சரோடு கூட ராஜ்ய பரிபாலனம் செய்துவா. அதே எனக்கு நீ நடத்துகின்ற முதல் உதவி என்று மற்றும் பல தேறுதல்களைச் சொல்லி ஹேமகண் டனை அழைத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்றான் ஸோமகாந்தன்.

ஸத்புத்ரனைத் தன்முன் உட்காரச்செய்து அரசசெய்ய வேண்டிய முறைமைகளைப் போதித்தான் அரசன். ராஜ குமார! உலகம் நன்மைபெறவே வர்ணாச்ரம தர்மங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவைகளை ரக்ஷி. சூர்ய உதயமாவ தற்கு முன் ஐந்து நாழிகை பிராம்மீ முகூர்த்தமாம். அச் சமயம் நித்திரை விட்டெழுந்திரு. எழுந்தவுடன் கடவுளை நினை. கொடிய பாபங்களைப் போக்கும் திருநீரை இட்டுக் கொண்டு குருவையும் கடவுளையும் த்யானம்செய். அதன் பின் பூமியைப்பார்த்து அடியேன் கால்கள் உன்மேல் படுதலால் தோன்றும் குற்றங்களைப் பொருத்தருள்வாய்

என்று பிரார்த்தனை செய், பின் விநாயகரையும் வழிபடு. பரமசிவத்தையும் ஸம்ஸார துன்பத்தைப் போக்க பார்வதியையும் வழிபடு. அரசியல் செவ்வனே நடக்குமாறு திருமாலையும் ஆரோக்கியந்தர சூரியனையும் மற்றையதேவர்களையும் முனிவர்களையும் முறையாகவழிபடு. நித்திய கருமத்தை முடித்து பிராம்மணர் மந்த்ரி முதலியோரைத் துணைகொண்டு உலகைக் காப்பாற்று. புத்ர! தர்மத்தினாலும் ஒழுக்கத்தினாலும்தான் செல்வம்வளரும்.

தர்மத்தை மறந்தால் தீங்கு வரும். பிரம்மசாரி, வானப்ரஸ்தன், ஸந்யாஸீ, அங்கஹீனர், நோயாளி, கிழவர், தம்மையடுத்தவர் இவர்களைப் பாதுகாத்துவா. ஒவ்வொருவனும் தன்மனைவியுடன் இருந்து இல்லறத்தை நடத்தச்செய். அதிதிகளைப் பரிவுடன் பூஜைசெய். ஒருவன் செய்த நன்றியை மறக்கலாகாது. பிரதி ப்ரயோஜனங் கருதாது நாகம் செய்வதேமேல். ஒருவன் துன்பப்படுங் காலத்தில் உடலையேனுமளித்து அதை அகற்றுவது சிறந்த தர்மம். எதை மறந்தாலும் செய்நன்றி மறக்கலாகாது. தாழ்ந்த வருணத்திற் பிறந்தவரானாலும் ஒழுக்கமுள்ளவர் உயர்ந்தவர். உயர்ந்த வருணத்தில் பிறந்தாலும் ஒழுக்கமில்லாதவர் தாழ்ந்தவர் ஆவர்.

ஹேமகண்ட! தர்மார்த்தங்களையும், இகபர இன்பங்களையும் அழித்து அடுத்தார்க்கும் கேடுவிளைவித்து நரகத்தையும் கொடுக்கின்ற பொறாமைக்கு இடந்தராதே. அரசர் ஸ்வதர்மத்தைச் செய்யுங்காலத்தில் பயப்படக் கூடாது. மஹாபாபியாயினும் இனிய சொற்களைச் சொல்லி குற்றவாளியைத் தண்டி. ஒழுக்கமுள்ளவரது சொற்களைப் பரிவுடன் கேள். உயர்ந்தோரிடம் பக்தியுடன் சிநேகம் செய். நீ குற்றஞ்செய்யாமல் இருந்து பிறர் குற்றங்களைக் கூடியவரை மன்னிக்கவேண்டும். சிறிதாயினுங் குற்றஞ்செய்யின் சிறு நெருப்பு, மலைபோன்ற வைக்கோற் போர்களை அழிப்பதுபோல் பெருவாழ்வையும் அழிக்கும். பகைவர்களுக்குச் செல்வத்தைக் கொடுக்குமது. மநுஸ்ம்ருதி முதலிய அற நூல்களிற்கண்ட வழிசெல். எனக் கூறி சபைக்குவந்தான் வேந்தன். கணித சாஸ்த்ரிகளை அழைத்து குமாரனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய ஒரு முஹூர்த்தம் பாருங்கள் என்றான். அவர்கள் தைப்

பூசமே நன்னளாகும் என்ருர்கள். உடனே அவன் தனது குலகுருவை வணங்கி தன் எண்ணங்களை வெளியிட்டு பட்டாபிஷேகம் செய்தான். மைந்தா! நான் கூறியபடி ராஜ்ய பரிபாலனம் செய்து வருவாயாக என்றுகூறி வனத்திற்குக் கிளம்பினன் வேந்தன்.

அரசன் வனம் சென்றபோது அமைச்சர், அந்தணர், நண்பர், நாகரிகர் முதலிய கூட்டங்களோடு சுதர்மையும் ஹேமகண்டனும் மிக்க மனவருத்தத்துடனே அவனைப் பின் தொடர்ந்தனர். யாவரும் தன்னைப் புடைசூழ்ந்துவர அரசன் சிறிது தூரம் சென்று ஒரு பொய்கையைக்கண் டான். அதனருகில் தங்கி தன்னேடு வந்தவர்களை அன் போடு பார்த்து, நீங்கள் ஏன் வினை வரவேண்டும்? அவ ரவர் வீட்டிற்குச் சென்று ஸுகமாய் இருங்கள் என்ருன். அதைக்கேட்ட யாவரும் தேவரீரில்லாதபோது எங்களுக்கு ஸுகம் ஏது? நாங்கள் இன்புற வேண்டுமானல் தாங்கள் நகரத்திற்கு வரவேண்டும். அல்லது நாங்கள் வனம் வர வேண்டுமென்ருர்கள். மறுபடியும் வேந்தனவர்களைப் பார்த்து என்மீதுள்ள அன்பிற்கு நன்றி. நான் வனம் செல்ல உத்தரவு கொடுங்கள் என்றுகூற, அவர்களும் அரசனுணையை மேற்கொண்டு திரும்பினர்கள். ஹேமகண் டன் தன் தந்தையின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு புலம்பினன். அரசன் வத்ஸ! இல்லறத்தில் இருக்கின்ற வர், வயது முதிர்ந்தால் வனம் செல்வது முறையன்ரே? அந்த முறைப்படி நாங்களும் வனத்திற்குச் செல்லுகின் ரேம். தாய் தந்தையருடைய உத்தரவை மீருமல் நட.

தசரத மகாராஜன் உத்தரவின்படி ஸ்ரீ ராமமூர்த்தி வனத்திற்குச் சென்ருரன்ரே? அவ்வாறு உன்னை யான் வனத்திற்குப் போகச் சொல்லவில்லை. ஸுகம் வந்தாலும் துன்பம் விளைந்தாலும் தாய் தந்தையர் சொல்லுகின்ற படி நடப்பதல்லவா புத்திரர் கடமை. இஃது உனக்குத் தெரியாததா? எங்களது உத்தரவின்படி நகரம் சென்று சுகமாக ராஜ்ய பரிபாலனஞ் செய்துகொண்டிரு. என்று பல தேருதல்களைச்சொன்னர். ஹேமகண்டன் தன் தந்தை யின் தாள்களில் தண்டனிட்டு பல ஆசிகளைப் பெற்றுத் தன் தாயினருகில் வந்து, அவள் பாதம் தனது கண்ணீரி னையும்படியாக விழுந்து பணிந்தான்.

தாய் அவனை ஆலிங்கனம் செய்துகொண்டு துயரப் படாதே! நீ எங்களைவிட்டு அரண்மனைக்குச் சென்று முதல் தெய்வமான விநாயகனைப் பூஜித்துவாவென்று பல ஆசிகளைக்கூறி விடையளித்தாள். அவன் ராஜ்ய பரிபாலனத்துடன் இடைவிடாது கணபதியைப் பூஜித்து வந்தான். ஸோமகாந்தன் தன் மனைவியோடும் இருமந்திரிமார்களோடும் வனம் சென்றான். அங்கே ரம்யமான பிருகு முனிவரின் ஆச்ரமத்தையணுகி அரசன் இளைப்பாறித் தூங்கினான். ராணி காவல் புரிந்தாள். இரண்டு அமைச்சர்களும் புசிப்பதற்கு வேண்டுவனவற்றைக் கொண்டுவர வகம் சென்றனர்.

அச்சமயத்தில் ஒரு மாணவன் நீர் கொண்டுபோவதற்காக குளத்தை நோக்கிவரச் சுதர்மை அவனைப்பார்த்து ஆச்சரியங்கொண்டு அப்பா குழந்தாய்! துஷ்டமிருகங்கள் வாஸஞ்செய்யும் வனத்திற்கு ஒரு துணையுமின்றி தனியாக வந்தனையே! நீ யார்? உன் பெயர் என்ன? இங்கு வரக் காரணம் யாது? எனக்கேட்டாள்! தாயே! என் பெயர் சியவனன். என் தாய் புலோமை. என் தந்தை பிருகு. நான் இங்கு தீர்த்தம் கொண்டு போவதற்கு வந்தேன். நீ யார் என்று அவன் கேழ்க்க ராணி தனது ஸமாசாரத்தைக் கூறினாள். விழிகளினின்றும் நீர் பெருகிற்று. மனமுருகி தாங்களிருந்த நிலையையும், இப்போது வனத்திற்கு வந்திருக்கின்ற காரணத்தையும் சொன்னாள். முனிகுமாரன் துயரமடைந்து பல தேறுதல்களைச்சொல்லி ஜலமெடுத்துக் கொண்டு தன்னாச்ரமம் சென்றான்.

அம்முனிகுமாரன் நெடுநேரஞ்சென்று வந்ததால் பிருகு முனிவர் அப்பா! நீ இன்று இவ்வளவு தாமதமாக வரக் காரணமென்ன? உன்முகம் வாடி இருக்கின்றதே! நீ சென்ற விடத்தில் யாது நடந்தது? என்று கேழ்க்க அவன் நடந்தவைகளை எல்லாம் சொன்னான். அரசனும் பட்ட மஹிஷியும் படும் துன்ப விருத்தாந்தத்தை விரிவாகக்கூறினான். அதைக்கேட்ட பிருகு மனமிறங்கி அருள் சுரந்து புத்திர! நீ போய் அவர்களையழைத்து வாவென்று கூற அவன் அங்ஙனமே அழைத்து வந்தான். ராஜனும், மஹிஷியும், மந்திரிமார்களும் அந்த ஆச்ரமத்தின் மஹிமையைப் பார்த்து ஆச்சர்யமடைந்தார்கள். அங்கு ஸகல

ஜீவராசிகளும் ஒன்றுக்கொன்று பகையில்லாமல் உற வாடிக்கொண்டிருந்தன. அன்றியும் ஆறு ருதுக்களிலும் ஏற்படும் வஸ்துக்கள் என்றைக்கும் ஸ்திரமாக இருந்தன. எண்ணிறந்த முனிபுங்கவர்கள் பிரமதேவனுக்குச் சம மாக வேதமோதினர். ரிஷிகள் சூழ்ந்திருக்கப் பிருகுமா முனிவர் புலித்தோல் ஆஸனத்தில் எழுந்தருளியிருப்பதை நோக்கினர். தம் தம் பெயர்களைச் சொல்லி ஸாஷ்டாங்க மாக பணிந்து எழுந்து இரு கரங்களையும் சிறமேற்கூப்பி துதிசெய்து நின்றார்கள். அரசன் மஹரிஷியைப்பார்த்து மஹர்ஷே! முன் செய்த புண்யத்தினால் எனக்குத் தங்கள் தர்சனம் கிடைத்தது. முன் ஜன்மத்தில் செய்த பாபத்தால் இவ்வியாதி வந்திருக்கிறது. இது நீங்க மணி மந்த்ரம் ஔஷதம், எல்லாவற்றையும் செய்தேன். உமது அருளால் தான் நான் நற்கதிபெறவேண்டும். எனக்கூறி மறுமுறையும் மஹரிஷியைத் துதித்தான். முநிவர் சற்று தியானம் செய்து தமது ஞானதிருஷ்டியினால் அவன் அங்நோயை யடைய யாது காரணம் எனத் தெரிந்து கூறி னார். அரசே! உனது மனதில் இருக்கின்ற வியா கூலத்தை ஒழித்துவிட்டு நீ வழி நடந்த சிரமத்தை அகற் றிக்கொள். பிறகு இதைப்பற்றி யோசிப்போம் என்று சொல்லி அருகேயிருந்த சிஷ்யர்கள் அவர்களுக்கு உண்ண உணவும் நிருமளித்தார்கள். அங்நால்வரும் உண்டு இளைப் பாறி மகிழ்ச்சியுற்றிருந்தார்கள்.

உடனே அரசன் படுக்கையிலிருந்து எழுந்து நித்ய கடன்களை முடித்து மஹரிஷியை வணங்கி நின்றான். அவனைப்பார்த்து நீ முன் ஜன்மாவில் கொல்லம் என்னும் பட்டினத்தில் சித்ரூபம் என்னும் வைசியனுக்கும், சுலோ சனை என்னும் அவன் மனைவிக்கும் புத்திரனாக ஜனித்தாய். காமந்தன் என்னும் பெயர் பெற்று நல்லயௌவன காலத்தில் குடும்பினி யென்பவளை விவாஹம் செய்து எழு பிள்ளைகளையும், ஐந்து பெண்களையும்பெற்று வாழ்ந்திருந்தாய். உனது தந்தை கிழத்தன்மையை அடைந்து இவ்வுலகத்தை விட்டு பரலோகம் சென்றார். உனது தாயும் உடனே அநுமரணஞ் செய்தாள். பிறகு உனக்குப் புத்தியுரைக்கத் தக்கவர் இல்லாமல் நீ வேசி யர் வலையில் வீழ்ந்தாய். அவர்களுக்காகப் பெரியோர்

தேடிவைத்த பொருள்களை யெல்லாம் அழித்தாய்! இது தர்மம் அல்லவென்று மனைவி பலவாறு சொல்வதையும் கேளாமல் ஆபரணம், வீடு, நிலம் முதலானவைகளையும் விற்று அவர்கட்குக்கொடுத்தாய். பின்னர் கொடுப்பதற்கு பொருளில்லாமற் தரித்ரனாகிச் சிறிதுநாள் பொய் சாட்சி, கோள் முதலானவைகளைக்கூறி பொருள் தேடித்தந்தாய். சிறிதுநாள் சூதாடியும் களவாடியும் சில பொருள்களைத் கொடுத்தனை. சிறிதுநாள் வழிப்போக்கர் பொருளைத் திருடிக் கொடுத்தாய். பிறர் மனைவியை பலாத்காரமாக புணர்ந்து கற்பைக் கெடுத்தாய். இத்தகைய உன்னை யாவரும் துஷ்டன் என்று வெறுத்தனர். கட்டுக்கடங் காது திரிகின்ற நீ மனைவியை மதிப்பதில்லை. குடும்பினி எனும் உனதுமனைவி தன்னைப்பாதுகாப்பவர் ஒருவரு மின்றி மனந்தளர்ந்து பசியால் வருந்திப் பலநாள் உண வின்றி தனது தாய் வீட்டைச்சேர்ந்தனள்.

நீ அந்த நகரிலேயே இருந்து கள்ளுண்டு களித்தாடி தலைகால் தெரியாமல் உனதிஷ்டப்படி அளவற்ற தீங்கு களைச் செய்து கொண்டுவந்தாய். இவைகளை அறிந்த அந்நகர அரசன் உன்னை அப்புறப்படுத்தினான். நீ பல கள்வர்களுடன் கூடி வழிப்பறி செய்துகொண்டிருந்தாய். அவ்வழியிற் போகின்றவர்களைக் கொலைசெய்து கொள்ளை யிட்டு மிருகம் பக்ஷிகள் முதலானவற்றைக் கொன்று பசி தீரத் தின்றாய். ஒருநாள் அவ்வழியாக கணவர்த்தன் என்னும் ஒரு பிராம்மணன் வர அவனைக் கண்டவுடனே அவனைப்பிடித்துக் கொல்ல எத்தனித்தாய். அப்பொழுது அவர், என்னைக் கொல்லாதே! என்னிட மிருக்கும் பணத்தை யெல்லாம் தந்துவிடுகிறேன்! என்னைக் கொல் லாமல் விட்டுவிடு! எனக்குப் புத்திரன் உண்டாகவில்லை! இரண்டாம்தாரம் மணம் செய்துகொண்டேன்! அவளிடத் திலும் இதுவரை ஸந்ததி உண்டாகவில்லை! அவளை ஆத ரிக்க ஒருவருமில்லை! நண்பனே! எனது உயிரை உனது அடைக்கலமாக்கினேன்! யான் தருகின்ற திரவ்யங்களை வாங்கிக்கொள்! என்னைக் கொல்லாமல் உயிர்ப் பிச்சை தா! என்று வேண்டிக்கொண்டார். அப்படிக் கூறியும் நீ அவரைக் கொலைசெய்தாய். அன்றுமுதல் உன்னை பிரம்ம ஹத்தி பிடித்துக்கொண்டு அநேக உபத்திரவத்தையும்

தந்தது. ஏதோ ஒரு புண்யவசத்தால் இராஜனுகப் பிறந்தனே என்ருர்.

இவ்வாறு சொல்லிய பிருகுமுனிவரை மீண்டும் அவ்வரசன் பணிந்தெழுந்து, அப்புண்யத்தையும் கூறவேண்டுமென்று வேண்டினன். பிருகுமுனிவர் கூறினர்; வேந்தனே! நீ முற்கூறியவண்ணம் அந்த பிரம்மஹத்தி பாபத்தினுல் பல துன்பங்களை அநுபவித்து வனத்தில் ஸஞ்சரிக்கையில் உனக்கு நடுக்கம், இளைப்பு, காசம் முதலான வியாதிகள் நேர்ந்தன. வயது முதிர்ந்தபோது உன்னைக் காக்கத் துணைவர்கள் ஒருவருமில்லை. அச்சமயத்தில் உன் மனைவியை நினைத்து அவளிடத்திற்கு ஒரு தூதனை யனுப்பினுய். அவனவ்வாறே இரக்கம் கொண்டு சென்று நீ தனியாயிருந்து படுகின்ற துன்பங்களனைத்தையும் சொன்னன். அவற்றை உன் மனைவி முதலான மற்றயாவரும் கேட்டுப் பயந்து இதை அரசன் அறிவானுயின் தங்களையும் சிக்ஷிப்பான் என்று நடுங்கி அவனைப் பார்த்து இவ்வார்த்தைகளை எங்கும் கூருமல் விரைவில் செல் என்று பயமுறுத்தி அனுப்பினர்.

அதை அவன் வந்து சொல்லக்கேட்டு, இனி யாது செய்வேன்? என்று துன்பமுற்றிருந்தாய். முற்பிறப்பில் செய்த நல்வினைப் பயனுனது உன்னை நெருங்கி வருங் காரணத்தால் அவ்வழியில் செல்லுகின்ற ஒரு வேதியன் உனது வரலாறு அறியாதவனுய், உன்னை வந்து யாசித்தான். அவ் வேதியனுக்கு நீ ஆடை யாபரணங்களையும் கொடுத்து மற்றும் பிராம்மணர்களிருந்தால் அவர்களையும் அனுப்பும். அவர்களுக்கும் வேண்டியவற்றை யான் அளிக்கிறேன் என்று கூறினுய். அந்த பிராம்மணன் பலரை அனுப்பினுன். அவர்கள் உன்னைப் பார்த்தவுடன் நீ எங்களுக்குத் தர்மம் செய்யவேண்டாம். நாங்கள் உன்னிடமிருந்து பொருளை வாங்கிக்கொண்டோமாகுல் நரகத்தில் விழுவோம். ஆகவே உன்னிடம் நாங்கள் யாசிக்க வரவில்லை. தர்மம் செய்யவேண்டுமென்ருல் இங்கு பாழடைந்த விநாயகக் கோவில் ஒன்றிருக்கிறது. அதைப் புதுப்பித்தால் உனக்கு க்ஷேமம் என்று கூறி, உன்னைக் கண்ட பாவம் நீங்குமாறு ஸ்நானம் செய்து ஜப தவங்களைச் செய்து சுத்தரானுர்கள்.

